# அங்கமெங்கும் புத்தம் புதிய உணர்வு பெற்றிடுக.



பட்டுப் புடவைகளிலே புத்தம்புதிய கற்பனைகள். சென்னையில் மிகப்பெரிய புடவை ஷோரூம்களில் ஒன்றிலிருந்து தேர்ந்தெடுப்பதற்கு 30000 பட்டுப் புடவைகள். காஞ்சிபுரம், ஆரணி, தர்மாவரம், போசம்பள்ளி, சேலம், கும்பகோணம், பெங்களூர் மற்றும் பனாரஸிலிருந்து வந்த மிகச்சிறந்த ரகங்கள். ஒவ்வொரு புடவையும் உங்களுக்குப் புத்தம்புதிய உணர்வைத் தந்திடும். புத்தம்புதிய உணர்வு பெற்றிட வாருங்கள்.



## லக்ஷ்மி சில்க் ஹவுஸ்

மிகப் பெரிய பட்டுப்
புடவை ஷோரூம்

பனகல் பார்க் எதிரில், (மாடியில்)
சென்னை-600 017

**நீங்கள் முற்றிலும் மாறிவிடுவீர்கள்!**

உரிமை: லக்ஷ்மி ஸில்க் ஹவுஸ்
(மதராஸ்) அண்ட் கம்பெனி

Market Movers/LSH/348/TM

# கல்கி



தீபாவளியின் குதூகலம்;
வண்ணங்கள்; அதன் தெய்வீகம்
முதலியவற்றைப் பிரதிபலிக்கும்
உன்னதத் தயாரிப்பு

மிகப்பிரபலமான எழுத்தாளர்களின் கதைகள்
கட்டுரைகள், கவிதைகளுடன் முதல்தர
ஓவியர்கள், புகைப்பட நிபுணர்களின்
ஒத்துழைப்புடன் வண்ணக் களஞ்சியமாக
உருவாகிறது. காலமெல்லாம் போற்றிப்
பாதுகாக்கக்கூடிய பொக்கிஷம்.

விலை ரூ.: 20/- தபால் செலவு: ரூ. 5/-

இன்றே உங்கள் ஏஜெண்டிடம் பதிவு செய்து
கொள்ளுங்கள்.

## 1984 தீபாவளி மலர்

# வெளுத்து வாங்குகிறார் வலையப்பட்டி!



மேடையில் மட்டுமல்ல பேட்டியிலும் வெளுத்து வாங்குகிறார் வலையப்பட்டி வருடங்களும், நிகழ்ச்சிகளும் இவர் நினைவில் இடறுவதே இல்லை. தவிலில் வாசிக்கும் கோர்வை போலவே, மறக்க முடியாத சிறு சம்பவங்களை முதலில் கோவையாகச் சொல்கிறார்... அவரே பேசட்டுமே?

**எப்படி முடிந்தது?**

இருபது வருடங்களுக்கு முன்னால் நடந்தது இது: திருச்சூரில் நிகழ்ச்சி முடிந்து, திருச்சிக்கு வந்து கொண்டிருந்தேன். வழியில் பாலக்காடு (அப்போது ஒலவக்கோடு) ஸ்டேஷனில், என்னுடைய பெட்டியிலேயே ஏறினார் பாலக்காடு மணி ஐயர் அவர்கள். கல்பாத்தியில் ஒரு கச்சேரி முடித்து விட்டு வருகிறார் அவர். என்னைப் பார்த்துவிட்டு, ''ஓ வலையப்பட்டியா?'' என்றார் அவர் பாணியில். சங்கீத சமாசாரங்கள் பற்றிப் பேசிக் கொண்டிருந்து விட்டு, ''திருச்சிக்காரனாக இருந்து கொண்டு எப்படிப் பெயர் எடுத்தாய்?'' என்று கேட்டார். (அப்போது வலையப்பட்டி திருச்சி மாவட்டத்தில் இருந்தது: இப்போது புதுக்கோட்டை மாவட்டம்) அவர் அப்படி கேட்டதன் காரணம், அப்போதெல்லாம் தஞ்சாவூர் கலைஞர்களுக்கு மட்டுமே மதிப்பு இருந்த காலம்.

''நீங்கள் பாலக்காட்டுக் காரராக இருந்து எப்படித் தமிழ்நாட்டில் பெயர் வாங்க முடிந்தது?'' என்று கேட்டேன், பவ்யமாக.

''அப்படியா கேட்கிறாய்?'' என்று சொல்லி விட்டு, ''நான் ஆரம்ப காலத்தில் வாசிக்கும்போது அப்படித்தான் 'யாரோ பாலக்காட்டுக்காரர்... அங்கிருந்து வந்து வாசிக்கிறார்' என்று சொன்னார்கள். எனக்கு எது சரியென்று படுகிறதோ அந்த வழியில் தைரியமாகப் போய்க் கொண்டிருந்தேன். போகப் போக எல்லாமே எனக்குச் சரியாக அமைந்து விட்டது. அது மாதிரி நீங்களும்

○ முதல்தரக் கலைஞருக்கு முதல்வர் பாராட்டு

உங்கள் வழியில் போய் நியாயமாகச்செயல் பட்டால் எல்லாம் சரியாகப் போய்விடும்'' என்றார். அதை நான் வேதவாக்காக எடுத்துக் கொண்டு நடக்க ஆரம்பித்தேன். எனக்கும் பாதை சரியாகவே அமைந்து போய் விட்டது...

இதற்குப் பிறகு 74–75–ல் மியூசிக் அகாடமியில், திருவிழா ஜெயசங்கர் அவர்களின் நாதசுரத்துக்கு நான் தவில் வாசித்தபோது பாலக்காடு மணி ஐயர் அவர்கள் வந்திருந்தார். அன்று ரீதிகௌளை 'ஜனனி நினுவினா' கீர்த்தனையில், என் மிச்ர சாபு தாள தனி ஆவர்த்தனத்தை ரசித்துக் கேட்டார். கச்சேரி முடிந்ததும் உடனே புறப்பட்டுச் சென்று விட்டார்.

மறுநாள் திருவல்லிக்கேணி சபா ஒன்றில் அவர் வாசித்த கச்சேரிக்குப் போயிருந்தேன். கச்சேரி முடிந்த பின் அவரை வணங்கி ஆசி கோரினேன்.

''ஓ, நான் எப்பவோ ஆசீர்வாதம்பண்ணியாச்சு. நீங்களும் வர வேண்டிய இடத்துக்கு வந்தாச்சு. இனிமே நான் புதிசா ஆசீர்வாதம் பண்ண வேண்டியதே இல்லே. நேத்து நீங்கள் மியூசிக் அகாடமியில் வாசித்த தனி ஆவர்த்தனத்தைக் கேட்டேன். கேட்டுட்டு வீட்டில் போய்ப் படுத்தேன். ஆனால் தூக்கம் வரலே. உடனே என் பையனை எழுப்பி, 'நீடாமங்கலம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையுடைய போட்டோவையும், மலைக்கோட்டை பஞ்சாபகேசன் அவர்களோட போட்டோவையும் பார்க்கணும் போல இருக்கு, எடுத்துக்கொண்டு வா' என்றேன். அப்புறம் 'லய சம்பந்தப் பட்ட புஸ்தகங்களையும் பார்க்கணும், கொண்டுவா'' என்றேன். அதையெல்லாம் பார்த்தப்புறம் தான் எனக்குத் தூக்கம் வந்தது'' என்றார். மனசார வாழ்த்தும் விசாலமான மனம் அவருக்கு.

**திருவையாற்றில்...**

ஸ்ரீ தியாகப்பிரம்ம உற்சவத்தில், ஒரு தடவை தனி ஆவர்த்தனம் வாசித்துக் கொண்டிருந்தேன். சிக்கலான பல சொற்கட்டுகளை வாசித்துச் சபையை மகிழ்வித்துக் கொண்டிருந்தேன். அதைக்கேட்டுக் கொண்டிருந்த வீணை பாலசந்தர் அவர்கள், கச்சேரி முடிவில், வியர்வையில் குளித்திருந்த என்னை அப்படியே கட்டிப் பிடித்துக் கொண்டு, ''நீடாமங்கலம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை தவில் வாசித்த போது பல ஆண்டுகளுக்கு முன் என்னையறியாது தாளம் போட்ட என் கை, இப்போது நீங்கள் வாசிக்கும் போதுதான் இரண்டாம் முறையாக என்னையறியாது தாளம் போட்டது'' என்று மேடையிலே பாராட்டினார்.

**வில்—வேல்—தவில்**

ஆகஸ்ட் 82–ல் விராலிமலையில் அருணகிரி நாதர் இசை விழாவில் எனக்குப் பாராட்டு நிகழ்ச்சி நடத்தினார்கள். அதில் பாலமுரளி அவர்கள், ''வலையப்பட்டியின் வாசிப்பைப் பற்றிப் பேசுவதை விட அதைக் கேட்டு ரசிப்பது தான் முக்கியம். அவர் கீர்த்தனைகளுக்கு வாசிக்கும் போது, தவிலாக நான் நினைப்பதில்லை. இரண்டு நாதஸ்வரங்களுடன் இவர் மூன்றாவது நாதஸ்வர வித்துவானாகவே எனக்குத் தோன்றுகிறது. ராமனுக்கு ஒரு வில்; முருகனுக்கு ஒரு வேல்; வலையப்பட்டிக்கு ஒரு தவில்'' என்று சொன்னார். ஒரே கரகோஷம். பிறகு ''வலையப்பட்டி வாசிப்பைப் பற்றிப் பேச ஒரு நாள் போதுமா?'' என்று அவரது பிரபலமான பாடல் வரியைப் பாடிவிட்டு அமர்ந்தார். எத்தனை பெரிய பாராட்டு இது!



○ குரு: மன்னார்குடி திரு. ராஜகோபால் பிள்ளை



○ வழிகாட்டிய சகோதரர் — பழனிவேல் பிள்ளை

**○ உங்கள் ஆரம்பகாலப் பயிற்சி பற்றிச் சொல்லுங்கள்?**

என் தகப்பனார் ஆறுமுகம் பிள்ளை அவர்கள் ஒரு சிறந்த நாதஸ்வர வித்துவான். அவர் எனக்குச் சின்ன வயதிலே நாதஸ்வரம் கற்றுத்தர முயன்றார். ஆனால் எனக்கு என்னவோ, நாதஸ்வரத்தை விட, தவில் மேலே தான் நாட்டம். அதனால் நானே தவில் வாசிக்கப் பயிற்சி செய்யத் தொடங்கினேன். என் சகோதரர் பழனிவேல்பிள்ளை



அவர்கள் ஒரு சிறந்த தவில் வித்துவான். அவரையே என் வழிகாட்டியாக ஏற்றுக் கொண்டேன். ஆரம்பத்தில் பயிற்சியோடு, ஊக்கமும் தந்தவர் அவர்தான். எனது பதின் மூன்றாவது வயதிலேயே தனியாக, தவில் வாசிக்க ஆரம்பித்து விட்டேன். இதைக் கவனித்த என் தந்தையார், மன்னார்குடி திரு. ராஜகோபால் பிள்ளையிடம் முறையாகப் பயிற்சி பெற அனுப்பினார். இவர் கொன்னக்கோல் பக்கிரியாப்பிள்ளை பரம்பரையில் வந்தவர்... பதினாறும் வயதில் தான் என் முதல் கச்சேரி. அது நல்லபடியாகவே அமைந்தது. அதுதான் ஆரம்பம்.

○ நீங்கள் குன்னக்குடியின் வயலினுக்கு எப்படி வாசிக்கத் தொடங்கினீர்கள்?

1971—ல், விராலி மலையில் அருணகிரி நாதர் இசை விழாவில், வயலின் கச்சேரி செய்ய வந்திருந்தார் குன்னக்குடி வைத்திய நாதன் அவர்கள். கச்சேரியை நானும் கேட்டேன். கேட்டுவிட்டு, ''உங்கள் வயலின் வாசிப்பு நாதஸ்வரம் மாதிரி இருந்தது'' என்றேன். ''அப்போ நீங்க எனக்குத் தவில் வாசிக்க வேண்டியதுதானே?'' என்றார். ''வாசிச்சாப் போவுது'' என்றேன் சிரித்தபடி.

அடுத்த ஆண்டே சென்னை அப்சரஸ் சபா ஆதரவில், குன்னக்குடி — வலையப்பட்டி கச்சேரி — காலையில் அண்ணாமலை மன்றத்தில் க. ராசாராம் அவர்கள் தலைமையில்; மாலையில் மியூசிக் அகாடமியில் ஏ.வி.எம். அவர்கள் தலைமையில் — நடந்தது. இன்று 2500 நிகழ்ச்சிகள் தாண்டிவிட்டது இந்த வயலின் — தவில் ஜோடி.

○ மறக்கவே முடியாத நிகழ்ச்சி?

1957—ஆம் ஆண்டு. கர்நாடகத்திலுள்ள தர்மஸ்தலா, உடுப்பி, சுப்ரமண்யா ஆகிய இடங்களில் கச்சேரிக்குப் போயிருந்தேன். சுப்ரமண்யாவில் கச்சேரி முடிந்து, இரவில் தனியாகச் சாலையில் நடந்து சென்றபோது ஒரு பாம்பை மிதித்து விட்டேன். அது என் காலைச் சுற்றிக் கொண்டுவிட்டது. நான் சத்தம் போட்டுக் கத்த ஆரம்பித்தேன். பாம்பு காலை விட்டு இறங்கி மேலே போயிற்று. யாரும் அதை அடிக்க விரும்ப வில்லை. அந்த ஊரில், பாம்புப் புற்றில் கையை விட்டு அந்த மண்ணையே பிரசாத மாகத் தருவது வழக்கமாம். பாம்பை மிதித்து விட்டுத் தூங்கக் கூடாது என்றார்கள், உடன் இருந்தவர்கள். கதைகள் சொல்லித் தூங்க விடாமல் செய்தார்கள். மறுநாள் வெள்ளியினால் செய்த பாம்பை அங்கே கோயிலில் காணிக்கையாகச் செலுத்தினேன். பாம்பு பட்டால் (கடிக்காமல் விட்டால்) அதிர்ஷ்டம் என்கிறார்களே, மற்றவர்கள் விஷயத்தில் எப்படியோ, எனக்கு அது நல்லதற்கு அறிகுறியாகவே இருந்திருக்கிறது.

○ வெளிநாடுகள் எல்லாம் போயிருப்பீர்களே?

சிலோன், மலேசியா, சிங்கப்பூர்... சிலோவில் எல்லாம் நாதசுரத்துக்கு முக்கியத்துவம் கொடுக்காமல், 'வலையப்பட்டி அன்ட் பார்ட்டி: தவில்' என்று தவிலுக்கு முக்கியத்துவம் கொடுத்துத்தான் விளம்பரப் படுத்துவார்கள். வித்தியாசமாக தனித்தவில் கச்சேரி. ரேடியோவில் இரண்டரை மணி நேரத் தனித் தவில்... சில தடவை விரல்களிலிருந்து ரத்தம் வடிய வாசித்திருக்கிறேன்!

○ காஞ்சிப் பெரியவர்களைச் சந்தித்ததாகச் சொன்னீர்களே?

சந்திப்பா! (சற்று உணர்ச்சி வயப்பட்டு) அப்போது எனக்குப் பதினெட்டு வயது. இளையாத்தங்குடியில் ஒரு கல்யாணத்துக்கு வாசிக்கப் போயிருந்தேன். அப்போது காலை ஆறு மணிக்கு நான் ஆற்றங்கரையில் குளிக்கப் போயிருந்தேன்... ஆற்றில் இறங்கி, காலை ஊன்றி, ஜபம் செய்து கொண்டிருந்தார் அவர். ஒரு முனிவரைப் போலத்தான் தோன்றியது... அவரை மறுபடி, மறுபடி பார்க்கவேண்டும் என்று தோன்றியது மனசுக்குள். பார்த்த பிறகு அவரை வணங்க வேண்டும் என்று தோன்றியது. அவரைப் பார்த்துநின்றேன். என்னைச் சில விநாடிகள் பார்த்தார்.

''உனக்கு ஊர் இங்கிருந்து பதினைந்து மைல் இருக்குமா?'' என்று கேட்டார். (சரியாக 15 மைல்தான்) ''ஆமாம்'' என்றேன். பிறகு ''என்னை நீங்கள் ஆசீர்வாதம் செய்ய வேண்டும்'' என்று வணங்கினேன்.

''ரொம்ப சௌக்கியமாய் இருப்பாய்!'' என்றார் கையை உயர்த்தி.

குளிக்க வந்தவன், நேரே விழுந்தடித்துக் கொண்டு கல்யாண வீட்டுக்கு ஓடிப் போய் விஷயத்தைச் சொன்னேன். நாதஸ்வர வித்வானுக்கோ ஆச்சரியம். ''எங்களுக்கு எல்லாம் கிடைக்காத தரிசனம் உனக்குக் கிடைத்ததே என்னையும் அங்கே கூட்டிக் கொண்டு போ'' என்றார். அவசர அவசரமாக அங்கே ஓடிவந்த போது —

அவர் அங்கே இல்லை.

இந்தச் சந்திப்பும், அவரது ஆசியும் என்னுடைய இன்றைய நிலைக்குக் காரணம் என்று நம்புகிறேன்.

- வலையப்பட்டி சுப்பிரமணியம் அவர்களுக்குக் கிடைத்த விருதுகள் பல. தமிழக அரசுக் கலைஞர் கடைசிச் சேர்க்கை.
- மத்திய அரசு கலாசார தூதுக்குழுவில் வெளிநாடு சென்ற முதல் தவில் வித்துவான் வலையப்பட்டி.
- பலப் பரீட்சை, வெள்ளாடு வேங்கையாகிறது, தோடி ராகம் முதலிய திரைப் படங்களில் வாசித்திருக்கிறார்.
- அரசியல் விவகாரங்கள் அத்தனையும் அத்துப்படி. (என். டி. ஆர். விவகாரத்தை நாதஸ்வரக் கலைஞர் திருவிழா ஜெயசங்கருடன் மிகத் தெளிவாக விவாதித்துக் கொண்டிருந்தார் )
- பரதநாட்டியம், நல்ல சங்கீதத்தை ரசிக்கிற மனசு. கலைக்குடும்பம் இவருடையது. மனைவி சீதாலட்சுமி அருமையாகப் பாடுவார். இரண்டு பெண்கள் பரதநாட்டியம் பயில, இரு மகன்கள் படித்துக்கொண்டே மிருதங்கமும் தவிலும் பயில்கிறார்கள்.
- பழனியில், வருஷா வருஷம் பங்குனி உத்திரத்தன்று, சன்மானம் எதுவும் பெறாமல் கச்சேரி செய்கிறார். ஆயுள் உள்ள வரை இப்படி வாசிக்கத் தீர்மானித்திருக்கிறார்.
- அதிக உயரமில்லை. இனிமையான குரல் வலையப்பட்டிக்கு. நிறைய ஹாஸ்ய உணர்ச்சி!
- வாசனைப் பவுடரையே நெற்றியில் விபூதியாகவும் பூசிக் கொள்கிறார்.

## தவில் பற்றிச் சில தகவல்கள்...

பலாமரத்தில் இதைச் செய்கிறார்கள். வயதான, பழங்கால, பலா மரத்தில் நடுவில் உள்ள வைரப் பகுதிதான் தேவை. போக்குவரத்து அதிகமுள்ள சாலைகளிலிருந்து எடுக்கப்படும் மரமாக இருக்க வேண்டும். இது சாஸ்திரம். (பலாவுக்குப் பேச்சு சக்தி உண்டாம்) இதைச் செய்வதில் திருவாவடுதுறை சொக்கலிங்கம் ஆசாரி தான் மிகத் திறமையானவர்.

வலது பக்கம் இந்த வட்டவடிவ வளை இருக்கிறதே. இதைத் திருவையாற்றில்தான் சிறப்பாகச் செய்வார்கள். இதில் தேர்ந்தவர் அப்பாக் கண்ணுப் பிள்ளை. அதற்கு அடுத்தபடியாக, சிதம்பரத்தில் மகாலிங்கம் பிள்ளை. (இவர்கள் இருவருக்கும் தம் சொந்தச் செலவில் ஒரு பாராட்டு விழா நடத்தியிருக்கிறார், வலையப்பட்டி.)

தவிலில் இழுத்துக் கட்டியிருக்கிறார்களே, இது வார். ஆந்திராவிலுள்ள தெனாலியில் தான் நல்ல வார் கிடைக்கிறது.

தவிலின் இரண்டு புறமும் ஆட்டுத் தோல்தான். தவில் கோலினால் வாசிக்கும் பகுதி பெண் ஆட்டுத் தோலில் செய்யப் பட்டது. ஒரு — குட்டி போட்ட ஆடாக இருக்க வேண்டும். கையால் வாசிக்கும் பகுதிக்கு, இரண்டு — குட்டி போட்ட பெண் ஆட்டுத் தோல் தான் நன்றாக இருக்கும்.

**வெற்றிலையைக் கசக்கி...**

சோப்பு, டெட்டால், கெரசின் போன்றவைகளின் நாற்றம் கைகளிலிருந்து உடனடியாகப் போகவேண்டுமென்றால், ஒரு வெற்றிலையை எடுத்துக் கசக்கி இரண்டு கைகளிலும் தேய்த்துக் கொண்டு பிறகு சுத்தமாகத் தண்ணீரில் அலம்பவும்.

—குடும்ப வழிகாட்டி— நூலிலிருந்து.
—ஆர். பானு.

தவில் கோல் — இருவாச்சி மரம் என்கிற பால் சத்துள்ள மரத்திலிருந்து எடுக்கிறார்கள். இது உடையாது; அந்தத் தோலுக்கும் இது தான் பொருத்தமானதாக இருக்கும்.

கையில் விரல்களுக்குப் போட்டுக் கொள்வதற்குப் பெயர் கூடு. இதைத் துணி, ஜவ்வரிசி, பச்சரிசி, கொஞ்சம் சிமெண்ட், முட்டை, ஃபெவிகால் ஆகியவற்றைச் சேர்த்துத் தயாரிக்கிறார்கள். இந்தக் கலவையை விரல்களில் சுற்றிப் பற்று மாதிரி போட்டுக் கொண்டு இரவில் படுத்தால், காலையில் உலர்ந்து விடும். பிறகு கழற்றி வைத்து விடலாம். கச்சேரியின் போது வாசிப்பதற்குப் போட்டுக் கொள்ளலாம்.

○ பேட்டி முடியப் போகிறதே. நீங்கள் சொல்ல நினைப்பது எதுவும் இருக்கிறதா?

இசைக்கு இன, மத, மொழி வேறுபாடு கிடையாது என்று எல்லோருமே சொல்லுகிறார்கள். உண்மைதான். ஏனென்றால், மதுரை—தோடி, தஞ்சாவூர்த் தோடி என்றும் கோயமுத்தூர் காம்போதி, பழனி காம்போதி என்றும் உண்டோ? தோடி என்றால் ஒரே ராகம்தான். காம்போதி என்றால் ஒரே காம்போதிதான். ஏன் இதைச் சொல்லுகிறேன் என்றால், இசையில் ஒரு குறிப்பிட்ட மாவட்டத்தைச் சேர்ந்தவர் தான் உயர்ந்தவர் என்றோ, சில மாநிலங்களைச் சேர்ந்தவர்தான் உயர்ந்தவர் என்றோ நினைப்பதற்கு இடமில்லை. எத்தனை பெரிய கலைஞரும், எந்த இடத்திலும் தோன்றலாம். ஆனால் இசை என்பது ஒன்றுதான். அதை நாம் ரசித்து, பாராட்டி, மகிழ்வதே இசைக்கு நாம் காண்பிக்கும் மரியாதை.

## முத்தாய்ப்பு...

வலையப்பட்டி 'தவுல்' என்றுதான் எழுதும்போதும், சொல்லும்போதும் வார்த்தையை உபயோகிக்கிறார்.

''தவுல் — தவில்: இதில் எது சரி?'' என்று கேட்டேன்.

''நாகஸ்வரம், நாதஸ்வரம் — எது சரி? அது போல்தான் இதுவும்'' என்று சிரித்தார் வலையப்பட்டி.

பேட்டி: **சாருகேசி**

அட்டை வண்ணப்படம்: **யோகா**



'கோகுலம்' கௌரவ ஆசிரியர் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பாவின் மகள் செல்வி தெய்வானை என்ற **தேவி** (M.A.)க்கும், செல்வன் **சே. நாச்சியப்பன்** B.Sc.,க்கும் இராயவரத்தில் 9-9-84ல் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. கவிஞர்களும், எழுத்தாளர்களும், ஆசிரியப் பெரு மக்களும் நேரில் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.


எதிர்க் கட்சிகள் ஒன்று இணையும் யோசனை
பிரதமர் ஆகும் ஆசை
தேர்தலில் கூட்டணி


என்ன மிஸ்டர் அந்தோணி, கட்சிக்குள் ஒற்றுமையை உண்டாக்கி விட்டு வந்திருக்கிறீர்கள் என்று உங்களைப் பார்த்தாலே தெரிகிறதே!..


உள்ளாட்சித் தேர்தல்
மீண்டும் ஒத்திவைப்பு
புஸ்
மக்கள்




# கல்கி

1984 அக்டோபர் 7
மலர் : 43 இதழ் : 10
ரக்தாக்ஷி புரட்டாசி 21




## அதிகார போதை!

**அ**வள் எட்டு வயதுக் குழந்தை. ஜெய்ப்பூரில் தன் உறவினர் வீட்டுக்குப் போயிருந்தாள். உடம்பு சரியில்லாமல் போயிற்று. டில்லிக்குப் பெற்றோரிடம் திரும்ப வேண்டும். அவளை இந்தியன் ஏர்லைன்ஸ் விமானத்தில் ஏற்றி விட்டார்கள். புதுதில்லியில் விமான நிலையத்தில் பெற்றோர் வந்து அழைத்துப் போவதாக ஏற்பாடு: போனில் பேசியாயிற்று. குழந்தை ரிசர் வேஷனுடன் கூடிய டிக்கெட்டுடன் விமானத்தில் ஏறி அமர்ந்தாயிற்று. 'இனி என்ன, விமானம் கிளம்பிப் பறக்க வேண்டியதுதானே' என்று வழி யனுப்ப வந்த உறவினரும் வீடு திரும்பக் கிளம்பிச் சென்று விட்டனர்.

அப்போது வந்தார், மகாராஜாதிராஜ, ராஜமார்த்தாண்ட, ராஜ கம்பீர, ராஜகோலாகல, மத்திய விளையாட்டுத் துறைத் துணை அமைச்சர் மாண்புமிகு அசோக் கெஹ்லாட் அவர்கள்! டில்லிக்குத் தாம் உடனே போயே ஆகவேண்டும் என்றார் அதிகார ஆணவக் குரலில். அவரிடம் ரிசர்வேஷன் உறுதி செய்யப்பட்ட டிக்கெட் இல்லை. ஆயினும் என்ன, அவரை எப்படி யாவது விமானத்தில் ஏற்றி அனுப்ப வேண்டியதுதானே தவிர 'விமானம் நிரம்பி விட்டது' என்று அதிகாரிகள் கூறிக் கொண்டிருக்க முடியுமா? அவர் உடனே டில்லி போய்ச் சேரவில்லை என்றால் இந்திய விளையாட்டுக்களின் கதி என்ன ஆவது? ஒலிம்பிக்கில் ஒரு மெடல் கூடப் பெறாத பெருமை தொடர்ந்து பாதுகாக்கப்பட அவர்தானே செயலாற்ற வேண்டும்!

வீரதீர பராக்கிரமசாலியான ஒரு இந்தியன் ஏர்லைன்ஸ் அதிகாரி புறப்படக் காத்திருந்த விமானத்தினுள் ஏறினார். சுற்றுமுற்றும் பார்த்தார். எல்லோரும் பெரிய மனிதர்கள். தத்தமது உரிமைகளை உணர்ந்தவர்கள். அவர்களிடம் வாலாட்ட முடியாது. அந்தக் குழந்தை கண்ணில் தென்பட் டாள். அவளிடம் தைரியமாகப் பேசினார் மாவீரர்! ''இதோ பார் மந்திரி வந்திருக்காராக்கும்! எவ்வளவு பெரிய மனிதர்! அவருக்கு உன் ஸீட்டைக் கொடுத்துவிட்டுக் கீழே இறங்கிக் கொள்... உம்... உம்'' என்று அவசரப்படுத் தினார். குழந்தை மிரண்டு போனாள். அழுது கொண்டே இறங்கி விட்டாள். ஜுரத்துடன் தவித்த அந்தக் குழந்தையை உறவினர் வீட்டுக்கு இரவு வெகு நேரம் கழித்து நிதானமாக அனுப்பி வைத்தனர். அவளுக்கென்ன அவசரம்? மந்திரி டில்லி போவதல்லவா முக்கியம்! குழந்தையைக் காணாது பெற்றோர் தவித்தால் என்ன? குழந்தை பயந்து போய் ஜுரத்துடன் அழுதால்தான் என்ன? நேருஜியின் பிறந்த நாளைக் குழந்தைகள் தினமாக முன்னிலும் கோலா கலமாகக் கொண்டாடி விட்டால் போயிற்று!

மத்தியிலும் சரி, மாநிலங்களிலும் சரி, நமது அமைச்சர்களுக்கு அதிகார போதை ஃபுல்லாக ஏறியிருக்கிறது. அதிகாரிகள் அமைச்சர்களுக்குப் பயப்படும்படியான நிலையைத் தோற்றுவித்திருக்கிறார்கள். கொஞ்சநஞ்சம் மனச்சாட்சிக்குப் பயந்து நடக்கும் அதிகாரிகள் பழி வாங்கப் படுகிறார்கள். அண்மையில் அ. இ. அ. தி. மு. க. தொண்டர்கள் இருவர் சென்னையில் அடாவடித்தனம் செய்ததற்காகக் கைது செய்யப்பட, அவர்களை விடுவிக்கு மாறு மதுராந்தகம் எம். எல். ஏ.வும் அமைச்சர் பொன்னையனும் கூற, நியாய உணர்வுக்குக் கட்டுப்பட்டு மறுத்த போலீஸ் அஸிஸ்டெண்ட் கமிஷன ருக்கும், இன்ஸ்பெக்டருக்கும் என்ன கதி நேர்ந்தது? முதல்வரே தலையிட்டு அவர்களை ஸஸ்பெண்ட் செய்தார். போலீஸ் உயர் அதிகாரிகள் வேண்டிக் கொள்ள, போனால் போகிறதென்று டிரான்ஸ்ஃபர் உத்தரவாக மாற்றினார்!

எம். எல். ஏக்களும், அமைச்சர்களும் அதிகார துஷ்பிரயோகம் செய்ய ஆரம்பித்தால், அதிகாரிகள் 'நமக்கேன் வம்பு' என்று கூழைக் கும்பிடுதான் போடுவார்கள். 'நான் சொல்வதோ, செய்வதோ தவறாயிருந்தால் சுட்டிக் காட்டத் தயங்காதே' என்று அதிகாரிகளுக்குக் கூறும் துணிவு ஆட்சிக்கு வருவோரிடம் இருக்க வேண்டும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்.

# மலைக்கனல்

நா. பார்த்தசாரதி

## அத்தியாயம் 26

எழிலிருப்புக்குப் புறப்படுவதற்குமுன் திருவின் வற்புறுத்தலைத் தட்ட முடியாமல் மகன் எழில்ராஜாவைப் பார்த்துவிட்டு வரப் போன சர்மா திரும்பி வந்து தெரிவித்த பதில் மிகவும் ஏமாற்றம் அளிப்பதாயிருந்தது.

''பாதுகாப்பாக இருக்க வேண்டுமென்று அவன் சார்ந்திருந்த பத்திரிகை நிர்வாகமே அவனை இரகசியமாக எங்கோ வெளியூருக்கு அனுப்பி வைத்துவிட்டது.''

மகனாகத் தன்னை வந்து பார்க்கப் போவதில்லை. தானாக அவனைப்போய்ப் பார்க்கவும் முடியாமல் தட்டிப்போய் விட்டது என்பதை எண்ணிய போது திருவுக்குத் தன் மேலேயே வெறுப்பாயிருந்தது. மகன் தன்னை வெறுப்பதற்குக் காரணமான அரசியல், கட்சி, அதிகாரம், பதவி, லஞ்ச ஊழல் எல்லாவற்றிலிருந்தும் தான் விடுபட்டாயிற்று. ஆனாலும் மகனுக்கு இன்னும் கூடத் தன் மேல் ஆத்திரமாகத்தானிருக்கும் என்று தோன்றியது.

மகனைச் சந்திக்க முடியாத ஏமாற்றத்தோடு எழிலிருப்பிற்குப் புறப்பட்டிருந்தான் திரு. அவன் மருத்துவமனையிலிருந்து அதிகாலையில் விமான நிலையத்திற்குப் புறப்பட்ட போது 'அண்ணன் திரு வாழ்க வாழ்க' என்ற குரல் முழக்கங்களுடனும், மாலைகளுடனும், மலர்ச் செண்டுகள், எலுமிச்சம்பழங்களுடனும் வழியனுப்ப வரும் யாரும் அப்போது தென்படவில்லை. பக்தியோடும், பயத்தோடும் சல்யூட் வைத்து அவன் ஏறிஉட்காருவதற்காகக் கார்க் கதவை மரியாதையாகத் திறந்து விடும் இன்ஸ்பெக்டர்கள், கான்ஸ்டேபிள்கள் யாரையும் காணவில்லை. மருத்துவமனை ஊழியர்களும், தூக்கக் கிறக்கத்தோடு சோர்வாகத் தென்பட்ட இரண்டொரு நர்ஸுகளும், டாக்டரும், சைக்கியாட்ரிஸ்ட்டும் தவிர வேறு யாரும் இல்லை. விமான நிலையம் வரை வந்து திருவை விமானம் ஏற்றி அனுப்பி விட்டு அதே ஏ. சி. செய்த காரில் சாலை வழியாக எழிலிருப்புக்குப் புறப்பட்டார்கள் சர்மாவும், கன்னையனும். பக்கத்து நகரிலுள்ள விமான நிலையத்தில் போய் இறங்கியதும் திருவை அங்கு வந்து அழைத்துச் சென்று எழிலிருப்பு டி. பி. யில் விடுவதற்கு வேறொரு சினிமா விநியோகஸ்தரின் காரை ஏற்பாடு செய்தாயிற்று. போய் இறங்குகிற இடத்திலும், தன்னை வரவேற்க எந்தக் கூட்டமும் வந்திராது. மாலைகள் 'அண்ணே' என்று கைகட்டி, வாய் பொத்தி வரவேற்க ஆளில்லாத நிலை எல்லாமே அவனைப் பொறுத்த வரை புதிய அநுபவம் தான். வருக வருக என்று வரவேற்கும் ஆளுயரச் சுவரொட்டிகள் நீளமான மாலைகள், வரவேற்பு வளைவுகள் எல்லாம் இல்லாமல் சமீபத்து ஆண்டுகளில் அவன் எந்த ஊருக்கும் போக நேர்ந்ததே இல்லை. யாரையும் கவனிக்காமல், யாராலும் கவனிக்கப்படாமல் இன்று முதல் முறையாக இப்படி ஒரு பிரயாணம் வாய்த்திருந்தது. மந்திரி பதவியை இழந்து தேர்தலில் தோற்றபின் சின்ன உடையார் திரும்பி எழிலிருப்புக்குச் சென்ற போதும் இப்படித் தானே இருந்திருக்கும் என்று நினைக்கத் தோன்றியது. ஆனால் அடுத்த கணமே, பரம்பரைப் பெரிய மனிதன் என்ற முறையில் ஜமீன்தார் எழிலிருப்பிலிருந்து பட்டணத்துக்குப் புறப்பட்டாலும் பட்டணத்திலிருந்து எழிலிருப்பிற்குத் திரும்பினாலும் அவரை வரவேற்க வழியனுப்ப ஒருகூட்டம் அவர் பதவியிலிருந்தாலும் இல்லா விட்டாலும் அவரைச் சுற்றி நிரந்தரமாக இருக்கும் என்பது நினைவு வந்தது. தான் மட்டுமே இன்று மலை உச்சியிலிருந்து கீழே உருட்டி விடப்பட்டாற் போன்ற நிலைக்கு ஆளாகியிருக்கிறோம் என்பதை உணர்ந்தான் அவன். விமானத்தில் உடன் பயணம் செய்த சில பணக்காரர்களும், தொழிலதிபர்களும் கூடத் தன் அருகே வந்து அமர்ந்து பேசத் தயங்கினாற் போலத் தோன்றியது. இந்தப் பிரமைகளும், உணர்வுகளும், தாழ்வு மனப்பான்மையும் ஏற்படுவதைத் தன்னால் அப்போது தவிர்க்க முடியாமலிருப்பதையும் அவனே தெரிந்து கொண்டான்.

கவனிக்க ஆளில்லாமல் விமானத்திலிருந்து கீழிறங்கிச் சென்றால் திருவுக்கு மிகவும் வேண்டிய — கடந்த காலத்தில் அவனிடமிருந்து ஏராளமான உதவிகளைப் பெற்றிருந்த — அவனுக்குப் பல விதங்களிலும் கடன்பட்டிருந்த அந்த நண்பரே அவனை வரவேற்க வந்திருக்கவில்லை. டிரைவரோடு காரை மட்டுமே அனுப்பியிருந்தார். தான் அப்போதே முக்கால் நடைப்பிணமாகி விட்டது போல் உடலும் மனமும் தளர்ந்து போயிருந்தான் திரு.

விமான நிலையத்திலிருந்து நகருக்குள் போகாமல் அங்கிருந்து ஐம்பது அறுபது மைல் தொலைவிலிருந்த எழிலிருப்பிற்கு அப்படியே காரில் புறப்பட்டான் அவன்.

மாலைகளும், வரவேற்புக்களும், ஆரவாரங்களும் இல்லாமல் முதலிலிருந்தே

ஒரு சாதாரணப் பாமரனாக வாழ்ந்திருந்தால் கூட நன்றாக இருந்திருக்கும். இது நாள் வரை அவற்றின் சுகங்களை எல்லாம் தாராளமாக அநுபவித்து விட்டு இன்று திடீரென்று சுகமான சொப்பனம் கலைந்த மாதிரித் தவிப்பது தான் வேதனையாயிருந்தது. கீழே விழ முடிந்த அளவு அபாயகரமான உயரங்களில் அமர்ந்திருப்பவர்களுக்குத் தான் விழுவதைப் பற்றிய பயமும் விழுகின்ற அநுபவமும் உண்டு. விழுந்த அநுபவத்தை அவன் இப்போது அடைந்து கொண்டிருந்தான். சம தரையிலிருப்பவர்களுக்கு விழுவதைப் பற்றிய பயமும் இல்லை. விழுகின்ற அநுபவமும் இல்லை என்று தோன்றியது. காரில் எழிலிருப்புக்குச் சென்று கொண்டிருக்கும் போதே தனது எழுச்சியின் முடிவையும் வீழ்ச்சியின் தொடக்கத்தையும் பற்றிச் சிந்தித்தபடி சென்றான்.

ஊரைச் சுற்றியிருந்த அழகிய மாந்தோப்புகள், நெல் வயல்கள் எல்லாம் அழிக்கப்பட்டுச் சிறிதும் பெரிதுமாக வீடுகள் கட்டப்பட்டிருந்தன. மூலைக்கு மூலை ஒவ்வொரு கட்சிக்கும் — கட்சியிலிருந்து பிரிந்த குட்டிக் கட்சிகளுக்குமாகப் பத்துப் பன்னிரண்டு கொடிக் கம்பங்கள் தென்பட்டன. சாராயக் கடைகளும், கள்ளுக் கடைகளும் முன்பு அவன் பார்த்திராத பல இடங்களில் தென்பட்டன. தாங்கள் ஆட்சிக்கு வந்தபின் மக்களுக்கு அந்த வசதியைத் தாராளமாக வழங்கி அவர்களைச் சிரிக்க வைத்து அதில் இறைவனைக் காண முயன்றது அவனுக்கு நினைவு வந்தது. லாட்ஜுகளே அதிகமில்லாத எழிலிருப்பில் மூலைக்கு மூலை விகாரமான பல லாட்ஜ் கட்டிடங்கள் தென்பட்டன. ஊர் செயற்கையாகவும் விகாரமாகவும் மாறியிருந்தது.

கார் எழிலிருப்பு டி.பி.யில் நுழைந்து நின்றது. டி.பி. வாட்ச்மேன் ஓடி வந்தான். இரு முன் கூட்டியே தந்தி கொடுத்திருந்தும் இப்போது அவன் மந்திரியில்லை என்பதால், ''யாரோ மினிஸ்டர் வரார்ன்னு கலெக்டர் ஆபீஸ்லேருந்து சொன்னாங்க... ரூம் சாவியில்லீங்களே'' — என்று குரலை மழுப்பி இழுத்த வாட்ச்மேனிடம் பதிலே பேசாமல் ஒரு முழுப் பத்துரூபாய் நோட்டை எடுத்து நீட்டினான் இரு. ஒரு. நிமிஷத் தயக்கத்துக்குப் பின்



வாட்ச்மேன் அதை வாங்கிக் கொண்டு, ''எதுக்கும் பார்க்கிறேனுங்க'' — என்று உள்ளே போனான். லஞ்சத்துக்கு ரேட் ஏற்படுத்திய தங்கள் வழியைப் பின் பற்றியே ஒவ்வொரு மூலையிலும் லஞ்சம் அங்கீகரிக்கப்பட்ட புது நடைமுறையாகி விருப்பதைத் திரு உணர்ந்தான்.

அப்போது அவனுடைய சாமான்களை எடுத்து வைத்துவிட்டு, ''உங்களை இறக்கி விட்ட கையோடக் காரைத் திருப்பிக் கொண்டாரச் சொல்லிட்டாருங்க'' — என்று டிரைவர் தலையைச் சொறிந்தான். அவனிடமும் ஒரு பத்து ரூபாயைக் கொடுத்தனுப்பிய பின் வாட்ச்மேன் வழிகாட்ட ஏ. சி. செய்த அறைக்குச் சென்றான் திரு. சென்னையிலிருந்தே சர்மாவையும், கன்னையனையும் ஏற்றிக் கொண்டு புறப்பட்டிருந்த தன்னுடைய கார் மாலைக்குள் அங்கு வந்து விடும் என்று நம்பினான் அவன். மிகவும் களைப்பாயிருந்தது. விமானத்துக்காக மிகவும் அதிகாலையில் கண்விழித்து எழுந்த சோர்வு வேறு சேர்ந்து கொண்டது. எச்சரிப்பதற்கு யாரும் உடனில்லாததால் குடிக்க வேண்டும் என்று தோன்றியது. வாட்ச்மேனிடம் ஒரு நூறு ரூபாயைக் கொடுத்து 'ரம்' வாங்கி வரச் சொன்னான். சண்பகத்துக்கும், பொன்னுசாமி அண்ணனுக்கும், மைத்துனனுக்கும் சொந்த மகனுக்கும் தான் இழைத்த துரோகங்களை எண்ணிக் கழிவிரக்கப்படும் நிலையிலிருந்த அவன் பகல் முழுவதும் குடியில் கழித்தான். பொழுது சாயத் தொடங்கிய பின்னும் கூடக் கன்னையனும் சர்மாவும் அங்கு வந்து சேரவில்லை. இவன் உடல்நிலை கெட்டு ஓய்வு எடுக்க வந்திருக்கிறான் என்ற விவரம் டி.பி. வாட்ச்மேனுக்குத் தெரியாததால் கேட்டதை எல்லாம் தாராளமாக வாங்கிக் கொடுத்திருந்தான் அவன்.

வெளியில் இருட்டியதும் ஒரு சால்வையை எடுத்துத் தலையிலும், உடம்பிலும் போர்த்திக் கொண்டு பழைய இடங்களையும் பழகிய இடங்களையும் பார்க்கும் ஆசையுடன் புறப்பட்டான் திரு.

அவனுக்குப் பெரிய ஏமாற்றமாயிருந்தது. வேக வைப்பதற்கு உரித்த கோழி மாதிரி ஊர் பொலிவும், உயிரோட்டமும் அற்றுப் போயிருந்தது. மலைகளில் மரங்களை விறகுக் கடைக்காரர்களும், கரிக்கடைக் காரர்களும் போட்டி போட்டுக் கொண்டு அழித்து விட்டதால் இரண்டு ஆண்டுகளாகத் தொடர்ந்து மழை இல்லை என்றார்கள். தேரடிக்குப் போனதும் அவன் அதிர்ச்சியே அடைந்தான். தேர் இருந்த இடத்தில் சிதைந்து கருகிய மரக் குவியல் தான் இருந்தது. விசாரித்ததில் போன வருடம் யாரோ ஒரு வெறியன் தீ வைத்ததால் தேரே அழிந்துவிட்டது என்றார்கள். தேரடி அநுமார் கோயில் இருண்டு கிடந்தது. உள்ளே பெருஞ் சுடராக அநாதிகாலமாய் இடைவிடாது அணையாமல் எரியும் அகண்ட விளக்கின் ஜோதி தென்படவில்லை. முகப்பில் ஒரு சிறு காடா விளக்கின் ஒளியில் ஐந்தாறு விடலைகள் காசு வைத்து மூணு சீட்டு விளையாடிக் கொண்டிருப்பது தெரிந்தது. அதே தேரடியில் எந்த இடத்தில் அடிபட்டு விழுந்து இரத்தம் சொட்டச் சொட்ட 'இங்கிருந்து தீமையை எதிர்த்து இனி நமது போராட்டத்தைத் தொடங்க வேண்டும்' என்று எண்ணினானோ அந்த இடத்தில் போய் நின்றான். நினைத்தான். இந்த ஊரின் வாழ்க்கைக்கே மூலாதாரமான தொரு ஜோதி என்று மக்கள் நம்பிய பாறை அநுமார் கோயில் விளக்கைப் பார்த்தபடிதான் முன்பு அவன் அப்படிச் சபதம் செய்திருந்தான். அந்த ஜோதியே இப்போது இல்லை. நந்தவனத்துக்குள் போனான். அங்கு நந்தவனமே இல்லை. நொடித்துப் போன ஜமீன் குடும்பம் அந்த இடத்தை ஹவுஸிங் போர்டுக்கு விற்று ஹவுஸிங் போர்டு அந்த இடத்தை புல்டோஸர் வைத்துச் சமதரையாக்கிக் கோழிக் கூண்டுகள் மாதிரிச் சிறுசிறு வீடுகளைக் கட்டிக் கொண்டிருந்தது. பெருமான் கோவிலுக்கும் தேரடிக்கும் நடுவிலிருந்த தாமரைக்குளம் வற்றிப் போயிருந்தது. குளத்து மேட்டில் ஒரு சாராயக் கடை வந்திருந்தது. எழிலிருப்பில் எழில் கழன்று போய் மூதேவி வந்து குடிபுகுந்தாற் போலிருந்தது.

ஒரு தலைமுறையின் நல்லுணர்ச்சிகள், அழகுகள், நம்பிக்கைகள், பண்புகள், கலாச்சாரங்கள் எல்லாம் செத்துப் போயிருப்பது புரிந்தது. இந்தக் கலாசாரக் கொலைக்குத் தானும் ஒரு காரணம்; தன் போன்ற ஒவ்வோர் அரசியல்வாதியும் இந்த அழிவுக்கு வித்திட்டவர்களில் ஒருவன் என்பதை அவன் உள் வேதனையோடு உணர முடிந்தது. அந்த மயக்கமான போதைத் தடுமாற்ற நிலையிலும் அவனுக்கு அப்போது ஒருகவிதை இட்டுக் கட்டத் தோன்றியது. வாழ்வின் ஆரம்பத்தில் அவனுள் குடி கொண்டிருந்து பின்பு வெளியேறி ஓடிப்போன கவிதை உணர்வு சில கணங்கள் இன்று மீண்டும் அவனுள் வந்து புகுந்து அவனை ஆட்டிப்

டில்லியில் மினி பஸ்கள் ஓடுகின்றன. இவற்றில் எப்போதும் கூட்டம் நெரிகிறது. உள்ளே ஏறுவது ரொம்ப கஷ்டம். ஏறி இடம் பிடிப்பவர்களுக்கு எம். பி. பி. எஸ். பட்டம் கொடுக்கிறார்கள் அதாவது Mini Bus Boarding Specialist.

—அனிதா ராமச்சந்திரன்.



ஊட்டம்
அளியுங்கள் உங்கள்
தோற்ற நிறத்திற்கு,
மின்னிடும் உங்கள் மேனி

# ரெயின்ட்ராப்

ஊட்டமளிக்கும் சோப்




ஆயில் ஆஃப் ஆல்மன்ட்ஸ்






டாடா தயாரிப்பு

Creative Unit-5976 Tam.

படைத்தது. அவன் தன்னைப் பற்றியே அக் கவிதையில் நினைத்தான்:

''தெரடி முனையில்
தெருவிளக் கடியில்
ஊரவர் ஒதுக்க
உற்றவர் வெறுக்கப்
பேரெதும் இன்றிப்
புகழெதும் இன்றிப் .
பேதையாய்க் கிடந்து
புழுதியில் புரண்டேன்
ஊரவர் கூடி
உற்சவம் எடுத்துப்
பேரினை வளர்த்துப்
புகழினைப் பெருக்கி
என்னுள் எதைக் கொன்றார்?
என்னில் எதை அழித்தார்?'' — எதை

அவித்தார் என்பது இன்னும் பொருந்துமோ என அவனுக்கே இரண்டாவது எண்ணமாகத் தோன்றியது.

நிலைமைகளை எதிர்த்துப் போராட நினைத்து இன்று சகல நிலைமைகளின் உருவகமாகவும் தானே ஆகிச் சீரழிந்திருப்பதை நினைத்த போது இருவின் மனக்குமுறல் அதிகமாகி யது. நிலையிலிருந்து புறப்பட்ட தேர் முறை கெட்டுத் தாறுமாருக ஓடிப் பல வருடங்கள் கழித்து நிலைக்கு வருவதைப் போல் தானும் இப்போது தொடங்கிய இடத்துக்குத் திரும்பி வந்திருப்பதாக அவனுக்கு நினைக்கத் தோன் றியது.

'ஊரவர் கூடி
உற்சவம் எடுத்துப்
பேரினை வளர்த்துப்
புகழினைப் பெருக்கி
என்னுள் எதைக் கொன்றார்?
என்னில் எதை அழித்தார்?—அவித்தார்?

என்று மறுபடியும் தனக்குத்தானே கேட்டுக் கொண்டான் இரு. பல ஆண்டுகளுக்கு முன் இந்த இடத்தில் இந்த மண்ணில் இருந்து கீழே விழுந்து மறுபடி எழுந்த போது வாழ் வைப் பற்றிய துடிப்பும், துணிவும் தாகமும், தவிப்பும், நேர்மையும் தன்னுள் இருந்தது போல் இப்போது மீண்டும் உண்டாகுல் என்றெண்ணியபடி சுற்றும் முற்றும் மருள மருளப் பார்த்தான் இரு. எங்கும் ஒரே இருட்டாயிருந்தது. தெரடியில் மட்டுமில்லை. உள்ளே தன் மனத்திலும் தான். திருமலை ராசப் பெருமாள் கோவில் கோபுரம், ஊரின் மூலாதாரமான முதல் சுடர் என்று பரம்பரையாக ஊரில் நம்பப்பட்ட அநுமார் கோவில் விளக்கு, எதிலுமே ஒளி இல்லை. அந்த இடமே ஒரு பாழடைந்த குப்பைமேடுபோல் இடிபாடு ஆகியிருந்தது. நனைந்து ஈரமான கட்டையில், தீப்பற்ருதது போல் நலிந்த தன் மனத்தில் பழைய ஒளிக்கீற்றை ஏற்ற முடியாமல் திணறினுன் அவன். மனமும் கூட ஏற முடியாமல் சுறைப்பட்டு நனைந்திருந் தது. அதை மீண்டும் பற்ற வைப்பதற்கான எந்த மூலக்கனலும் அங்கு இல்லை. எங்கும் இல்லை. பல வருடங்களுக்கு முன் எந்த இடத் தில் அநாதையாய் விழுந்து கிடந்தானே அதே இடத்தில் இன்று மீண்டும் பிரக்ஞை பிசகி நிலைகுலைந்து கீழே விழுந்தான் அவன். சுற்றிலும் நன்ருக இருட்ட ஆரம்பித்திருந் தது.

(தொடரும்)

## வட்டமேஜை



● திருவாளர்கள் கே. பாலசந்தர்-மாலன் தொடர்பான என் கேள்விக்கான தராசு பதில் கண்டேன். நன்றி. திரு மாலன் மீது என் குற்றச்சாட்டு இதுதான்: பாலசந்தரின் நிறைகளை — சாதனைகளைப் பாராட்டி மாலன் எழுதியதாக நான் அறியேன். ஒரு படைப் பாளியிடம் பாராட்ட வேண்டிய அம் சங்கள் இருக்கும் போது அதைப் பாராட் டாமல் மௌனம் சாதிப்பது அல்லது நழுவி விடுவது. குறைகளை மட்டும் பட்ட வர்த்தனமாக (அதாவது கிழிகிழி என்று கிழிப்பது) எழுதுவது — அதுவும் தான் ஓர் அறிவுஜீவி என்ற முனைப்பு மட்டும் மேலிட— என்ன விமர்சன தர்மம் என்று எனக்குத் தெரியவில்லை.

ஸ்ரீரங்கம். வி. சௌரிராஜன்.

● பாரதி விழாவில் பாரதி சொன்ன புதுமைப் பெண்ணாக, அனல் பறக்க, கனல் தெறிக்க நாட்டில் உள்ளதை உள்ளபடி யாருக்கும் பயப்படாமல் தன் உள்ளக் கருத்துக்களைச் சொன்ன செல்வி கீதா மீனாட்சிக்கு எனது மனமார்ந்த பாராட்டு தல்கள்.

லால்குடி—1 எம். இராஜேந்திரன்.

● இதயத்தை சிலிர்க்க வைக்கும் ஒரு சிறந்த கட்டுரை "சிறைச்சாலை என்ன செய்யும்?"

சந்தர்ப்பச் சூழ்நிலையால் மட்டுமின்றி, சந்தர்ப்பம் உருவாக்கி விட்டுத் தவறு செய் யும் மனிதருக்கிடையில் அருணாசலம் வித்தியாசமானவர்தாம். சூழ்நிலை, பண வசதி இவை அனைத்தும் இருந்தும் கல்விச் செல்வத்தைப் பெறாமல் இருக்கும் இன்றைய இளைஞர் சமுதாயத்திற்கு இவர் போன்றவர் தாம் சாட்டையடியாக விளங்க முடியும்.

கரூர்—2. எம். தனபாலன்.

● சிவாஜி கணேசனைப் பற்றி அனிதா பிரதாப் கூறிய கருத்துக்கள் (அரசியல் சிவாஜி ஒரு குழந்தை போல. அரசியல் வாதிகளுக்கே உரிய சூட்சம அறிவு அவ ருக்கு இல்லை; வெளுத்ததெல்லாம் பால் என்று நம்புகிற அப்பாவி) முழுமையாக ஏற்றுக் கொள்ளும்படி இருந்தன.

ஈரோடு—10. மேஜர் தாசன்.

● ஸ்ரீ காஞ்சி காமாட்சி அம்பாளுக்கு செய்யப்பட்ட 'தங்க ரதம்' பற்றிப் படித்த தும் பரவசமடைந்தேன்.

ஸ்ரீரங்கம். எஸ். ஸ்ரீதர். எஸ். வெங்கிட்டு.

● என். டி. ஆர். மீண்டும் முதல்வராகத் தெரிவு செய்யப்பட்டிருப்பது தர்மத்தின் வாழ்வுதனை சூது கவ்வும் மீண்டும் தர்மம் வெல்லும் என்னும் கூற்றை மெய்ப்பிப்ப தாக உள்ளது.

குளி ஆர். கணபதி.

● ஆந்திர சரித்திரத்தில் இந்த வெட்கக் கேடான தழும்பு நிலையாகி விட்டாலும், பதவி இழந்த ஒரு முதல்வர், மீண்டும் மக்கள் சக்தியைத் திரட்டி முதல்வராகி இருக்கும் அற்புதமான நிகழ்ச்சியும் சரித்தி ரத்தில் இடம் பெறுகிறது.

சென்னை—5. எஸ். வி. ராஜசேகர்.

● பாரதி விழாவில் டாக்டர் அவ்வை நடராஜன் அவர்கள் பேச்சிலே என்ன தவறு இருக்கிறது என்று தெரியவில்லை. யார் மீதும் தவறு காணாமல், யாரையும் குற்ற நோக்கோடு அணுகாமல், யதார்த்த மான, நடைமுறைக் கண்ணோட்டத்தோடு ஒரு சிந்தனையைத் தூண்டி விடுவது தவறு என்றால் பாரதிக்கு எதற்கு விழா?

கோவை—21. கே. ஜகதீசன்.

● தலையங்கத்தில் சாடியிருந்த வெட்கக் கேடான விஷயங்களில் ஒன்றை விட்டு விட்டீர்களே! 'என். டி. ஆர். மீண்டும் முத லமைச்சர் ஆன செய்தி குறித்து அம்மையா ரிடம் கேட்டதற்கு "இதுவும் எனக்குத் தெரியாது" என்றாரே. அதுதான் வெட்கத் திலும் வெட்கக்கேடான "சொல்!"

சென்னை—5. குமரி ஜெய்.

● தஞ்சையில் ராஜராஜனுக்கு விழா எடுத்து காவலர் விளையாட்டு திடல், மரங்கள் பூராவும், மின்விளக்கு ஒளி அலங்காரம் செய்து சிறப்பித்தனர். கண்கொள்ளாக் காட்சிதான். பாராட்டுவோம்.

ஆனால் பெரிய கோயிலில் எந்தவித அலங்கார மின் ஒளியும் செய்யவில்லை. ஒரு கண்ணில் கண்ணாம்பு, ஒரு கண்ணில் வெண்ணெய் என்பது போல் பெரியகோயில் அலங்காரத்தை விழாக் குழுவினர் கவனிக் காதது பெரும் குறையே. வருத்தத்துடன்.

பாபநாசம் பி. கலாநிதி.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது)

# விமர்சன தர்மம் வேண்டாமா?



படுக்கையின் இணையிலாத அணிகள்!

பாலியெஸ்டர்—
கலப்பிழை டீலக்ஸ் விரிப்புகள்
பொகேல் மற்றும் சூப்பர்கேல்—
சுகம்தரும் ப்யூர் காட்டன் விரிப்புகள்.

**பாம்பே டையிங்**

மாறுபாட்டை நீங்களே பாருங்கள்!



# ஒரு தங்கை தாயானாள்

—ஓ.கே.சுதா—

"ஐயோ, ஐயோ" என்று அலறிய பாபுவின் குரலைக் கேட்டு ஓடோடி வந்தாள் மாலதி.

"போதும் அண்ணி நிறுத்துங்க. உங்க அடியை! குழந்தை தாங்குவானா?"

"ஏய் மாலதி. நீ ஒன்னும் அவனுக்காகப் பரிந்து பேச வேணும். அதோ பார் கண்ணாடி பாட்டில் உடைஞ்சு கிடக்குது. நான் உடைக்கலைன்னு பொய் வேற சொல்றான்" என்றாள்.

"ஐயோ அண்ணி என்னை ஒரு வார்த்தை கேட்டிருக்கக் கூடாதா? நான் காலையில் எழுந்து வந்த போது எலி ஒன்னு இந்த பாட்டிலை உருட்டித் தள்ளிவிட்டு என் கால் சப்தம் கேட்டதும் ஓடிச்சு"

அண்ணி மரகதம் ஒரு நொடி நொடித்து அழகு காட்டி விட்டுப் போனாள்.

மாலதிக்கு அடக்க மாட்டாமல் துக்கம் பொங்கியது.

"ரொம்ப வலிக்குதாடா கண்ணா?" என்று பாபுவைக் கட்டி அணைத்துக்கொண்டு ஆறுதல் பல கூறிப் படுக்க வைத்தாள்.

'அண்ணனின் முதல் சம்சாரம் பாலா உயிரோடு இருந்திருந்தால் பாபு இந்தப் பாடு படுவானா? அண்ணன் இந்த அரக்கியை ஒரு வார்த்தை தட்டிக் கேட்பதில்லை. அவன் சிறு பிள்ளைதானே? உன் குழந்தையாய் இருந்தால் இப்படிச் செய்வியான்னு ஒருநாள்கூட கேட்கிறதில்லை. இப்படியே இன்னும் எத்தனை நாளைக்குத் தான் பாபு அடிபடுவது?' பல குழப்பங்களுக்கு இடையே மடியில் கிடந்த பாபுவின் தலையை மெல்ல வருடினாள். அந்த ஸ்பரிசம் புண்ணாய்ப் போயிருந்த மனசுக்குக் கொஞ்சம் இதம் அளிக்கும்.

அன்றிரவு பாபு தூக்கத்தில் முனகினான். புரண்டான். அமைதியில்லாமல் அவன் தவிப்பதைச் சகிக்க முடியாமல் மாலதி எழுந்து முதுகில் தட்டிக் கொடுத்தாள். கழுத்தருகே கைவைத்த போது அனலாகக் கொதித்தது. அந்த இருட்டிலும் பாபுவின் பிஞ்சு உடல் லேசாக நடுங்குவது தெரிந்தது.

உடனே எழுந்து அண்ணனின் அறைக் கதவைத் தட்டினாள். "அண்ணா, பாபுவிற்கு உடம்பு அனலாக் கொதிக்குது. நடுக்கம் வேறு இருக்கு. உடனே, அவனை டாக்டர் கிட்ட கூட்டிக்கிட்டுப் போகணும். ஒரு ஆட்டோ கொண்டு வாங்க."

அண்ணி மரகதம் தான் இன்று சிலிர்த்துக் கொண்டு எழுந்தாள்.

"இதோ பார். இந்த அர்த்த ராத்திரியில அவரை எழுப்ப முடியாது. உனக்கு அக்கறை இருந்தா நீயே கூட்டிக்கிட்டுப் போறது?"

அடுத்த கணம் பெட்டென்று கதவு படீரென்று மாலதி முகத்தில் அறைந்தாற் போல் சாத்தப்பட்டது.

"இதோ பாருங்க, நீங்க எழுந்திருக்க வேண்டிய அவசியமில்லை. மாலா ரொம்ப ஆர்ப்பாட்டம் செய்யறா. பேசாம படுங்க" என்று அண்ணி அதட்டுவது மூடிய கதவையும் தாண்டிக் கேட்டது.

இதற்கு இன்று ஒரு முடிவு கட்டியாக வேண்டும் என்று நினைத்தவள், பரபரவென்று உள்ளே சென்று ஒரு பெட்டியில் தன் துணிகளையும், பாபுவின் துணிகளையும் திணித்துக் கொண்டாள். பின் கதவைத் திறந்து கொண்டு பாபுவைக் கைத்தாங்கலாக அழைத்துக் கொண்டு இருட்டில் அடியெடுத்து வைத்தாள். இனிமேல் பாபுவை இவர்களிடம் விடக் கூடாது. நாமே தாய்க்குத் தாயாக இருந்து அவனை வளர்க்க வேண்டும் என்ற எண்ணம் அவளுள் வலுப்பட்டது.

வெளியில் காலடி எடுத்து வைக்குமுன் ஒரு துண்டுக் காகிதம் கண்ணில் பட்டது. அதில் நாலு வார்த்தைகள் எழுதினாள்.

'ஒரு தங்கை இன்று தாயானாள்' என்று!




## 10

**கா**ஷ்மீரப் பின்னணியில் விஷ்ணு பிரஸாத்தின் பக்கத்தில் மிக நெருக்கமாக உட்கார்ந்திருக்கிற புவனேஸ்வரி; விஷ்ணு பிரஸாத்தின் கை உரிமையோடு தோளை அணைக்க நின்று கொண்டிருக்கும் புவனேஸ்வரி; பிறந்தநாள் விழாவில் துண்டு கேக்கை அவன் வாயில் ஊட்டுகிற புவனேஸ்வரி; அவன் துடுப்பை வலிக்க எதிரில் புன்னகையுடன் படகில் உட்கார்ந்திருக்கிற புவனேஸ்வரி; குதிரையில்போகிற, பனியில் சறுக்குகிற, மழையில் நனைகிற புவனேஸ்வரி, புவனேஸ்வரி, புவனேஸ்வரி...

அம்மா... அவள் மனதில் இமாலய உயரத்தில், புனிதமாக உட்கார்ந்திருந்த அம்மா... நினைத்து நினைத்துப் பெருமைப் பட்ட அம்மா... அந்த அம்மாவா...? நிஜமாகவா இப்படி இவனுடன் புகைப்படமெடுத்துக் கொண்டிருக்கிறாள்...? புகைப்படம் எடுப்பது இருக்கட்டும். இவனுடன் இப்படியெல்லாம் இருந்தது தானே புகைப்படமாக வந்திருக்கிறது. நிஜமாக இது அம்மா தானா...?

அவளுக்குத் தெரிந்த அம்மாவால் நிச்சயம் இப்படி நடந்து கொள்ள முடியாது. ஒரு அந்நிய ஆடவனை இந்த அளவிற்கு நெருங்கி... இல்லை. இது அம்மா இல்லை.. இது அம்மாவாக இருக்க முடியாது...

புகைப்படங்களை டீபாய் மீது போட்டு விட்டு முகத்தில் எந்த சலனத்தையும் காட்டாமல் கேட்டாள் கிருத்திகா:

''சரி, என்னை இப்படங்களை வைத்து எப்படிக் கண்டுபிடித்தீர்கள்...?''

''இதோ, இந்தப் புகைப்படத்தைத் தனியாக வைத்துக் கொண்டிருக்கிறேன், பார்...''

அவள் கையில் கொடுக்காமல் தன் கையில் வைத்தபடி அந்தப் புகைப்படத்தைக் காட்டினான் விஷ்ணுபிரஸாத். அதில் அவளும் அம்மாவும். சென்னையில் ஜி. கே. வேலில் எடுத்தது. கலர் புகைப்படம். அம்மாவும் அவளும் அருகருகல் நிற்பது மிக நன்றாக வந்திருந்தது. வீட்டின் வரவேற்பறையில் பெரிதாக்கப்பட்டு மாட்டப் பட்டிருக்கும் இந்தப் படத்தின் பிரதி எப்படி இங்கே வந்தது?...

அம்மா இதை அனுப்பியிருப்பது நிஜமானால் சற்று முன் காட்டிய அத்தனைப் படங்களும் நிஜமாகத்தான் இருக்கவேண்டும். அப்படியானால்... அப்படியானால்...

கிருத்திகா அருவருப்பிலும், கோபத்திலும் உடல் குறுக எழுந்து கொண்டாள். அதற்குமேல் ஒரு விநாடி கூட அந்த வீட்டில் தங்கக் கூடாது என்ற உணர்வு தோன்ற,

''நான் வருகிறேன்...'' என்றாள்.

''என்ன பேசாமலே போகிறாய்...?''

—அவன் ஒரு எதிர்பார்ப்புடன் கேட்டதும் கண்களை இடுக்கி மிக வெறுப்பாக அவனைப் பார்த்தவள், ''சொல்ல என்ன இருக்கிறது...?'' என்றதும் மெலிதாகச் சிரித்தான் விஷ்ணு பிரஸாத்.

''உன்னிடம் ஒரு உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால், இந்தப் புகைப்படங்களையெல்லாம் உன்னிடம் காட்டக்கூடாது என்றுதான் புவனு கேட்டுக் கொண்டாள். அதிலிருந்து ஒரு விஷயத்தை என்னால் தெரிந்து கொள்ள முடிந்தது. உனக்குத் தெரியாமல் தான் இத்தனை விஷயங்களையும் செய்கிறாள் அவள் என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது. உன் அம்மா புத்திசாலி கிருத்திகா, பிழைக்கத் தெரிந்தவள். அதனால் தான் இவ்வளவு குறுகிய காலத்திற்குள் வீடு, கார், இத்யாதி வசதிகளைப் பெற முடிந்தது. ஆமாம், நீ எப்படி? அம்மா மாதிரியே புத்திசாலியா இல்லை அவளை விடவும் இன்னும் விஷயம் புரிந்தவளா...?''

**இந்துமதி**

''யூ ஸ்கௌண்ட்ரல்... பாஸ்டர்ட்...'' என்கிற வார்த்தைகள் நாக்கு நுனி வரை வந்துவிட சட்டென்று தன்னைக் கட்டுப்படுத்தி அடக்கிக் கொண்டாள். தான் இருக்கிற சூழ்நிலையைப் புரிந்து கொண்டாள். அது அவனுடைய வீடு. அதிலும் அந்த அறையில் தனியாக மாட்டிக்கொண்டிருக்கிறோம். தான் எவ்வளவு கத்தினாலும் வெளியில் கேட்காதது மட்டுமின்றி யாரும் உதவிக்குக் கூட வர மாட்டார்கள். இந்த சந்தர்ப்பத்தில் புத்திசாலித்தனமாக நடந்து கொண்டு முதலில் இவனிடமிருந்து தப்பித்து இந்த அறையையும், வீட்டையும் விட்டு வெளியேறி விட வேண்டும். அதற்குப் பின்னர் இந்தப் பக்கம் திரும்பாததோடு இவன் முகத்திலும் விழிக்கவே கூடாது...

தனக்குள் ஏற்பட்ட படபடப்பைக் கீழ் உதட்டைக் கடித்து அடக்கிக் கொண்டாள். கோபம், வெறுப்பு, அருவருப்பு எல்லாவற்றையும் மறைத்து நிதானமாகப் பேசினாள்:

''ஹாஸ்டலுக்குப் போக நேரமாகிறது.. அப்புறம் வார்டனின் கேள்விகளுக்குப் பதில் சொல்லியாகணும்...''

''அது கிடக்கட்டும். என் கேள்விக்கு நீ இன்னும் பதில் சொல்லலியே...?''

''என்ன கேட்டீங்க...?''

''அம்மாவை விட நீ புத்திசாலியா, இல்லையா...?''

குமட்டிக் கொண்டு வந்தது கிருத்திகாவிற்கு. சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள். 'இவன் எதிரில் நிற்கவே தனக்கு இப்படி அருவருக்கிறதே... அம்மா எப்படி இவனோடு...?'

மனதை அடக்கி உதட்டில் லேசாய்ப் புன்னகையை வரவழைத்துக் கொண்டு கேட்டாள்: ''நீங்க எப்படி நினைக்கறீங்க?''

''அம்மாவை விட அழகா இருக்கற மாதிரி புத்திசாலியாகவும் இருப்பேன்னு நினைக்கிறேன்...''

''டெல்லியின் மிகப் பெரிய வியாபாரியான உங்க நினைப்பு தப்பாக இருக்குமா...?''

''தட்ஸ் குட். வெரி குட்... அந்த அர்ஜுனுடன் பழகறியே, காதல், கத்தரிக்காய்னு முட்டாள்தனமாக வாழ்க்கையைக் கெடுத்துக்கப் போறியேன்னு பயந்தேன். என் பயம்தான் முட்டாள்தனமானதுன்னு சொல்லிட்டே... சரி, எப்போ வரே...? நாளை சாயந்திரம் ஹாஸ்டலுக்கு வண்டி அனுப்பட்டுமா...?''

''வேணும். நானே வரேன்...''

''நோ. நோ. இனிமேல் நீ கண்டவன் வண்டியில் எல்லாம் வரக் கூடாது. என் வண்டி, என் வீடு, என் பணம், நான்.. என்ன...?''

கிருத்திகா பற்களைக் கடித்துக் கொண்டு பேசாமல் நிற்க அவன் அருகில், மிக அருகில் வந்ததும், தானாக நகர்ந்து கொண்டு அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

''என்ன பார்க்கறே...? இப்பவே என் வண்டியில் போயிடறியா...?''



''வேணும். வெளியில் வண்டி காத்துக் கிட்டிருக்கு. வந்த வண்டியிலேயே போயிடறேன்...''

''அப்போ நாளைக்கு அஞ்சு மணிக்கு வண்டியனுப்பலாமா...?''

''ம்...''

''இப்போ முன் பணமாக ஏதாவது தேவையா...?''

குபீரென்று உடல் ரத்தம் முழுதும் தலைக்கு ஏறிற்று. கால் செருப்பைக் கழற்றி ஆத்திரம் தீர அடிக்கத் தோன்றியது. 'யு பாஸ்டர்ட்! யாரைப் பார்த்து இந்த வார்த்தை கேட்கிறாய்...? யாரென்று நினைத்துக் கொண்டாய் என்னை...?'

கேட்டால் 'புவனேஸ்வரியின் பெண் என்று' என்ற பதிலைத் தருவான். 'அம்மா, அம்மா.. நீயா...?'

ஆத்திரம் முழுவதும் அம்மா மீது திரும்ப பதில் எதுவும் சொல்லாமல் நின்றாள். அவன் அதைத் தவறாகப் புரிந்துகொண்டு,

''இதோ இரு. பணம் கொண்டு வர்றேன்...'' என்று அறைக் கதவைத் திறந்து வைத்து விட்டு அடுத்த அறைக்குப் போக—

இவள் பாய்ந்து விநாடி நேரத்தில் படிகளைக் கடந்து ஓடிப் போய்க் காரில் ஏறி, ''சீக்கிரம் வண்டியை எடு கிஷன்.... நேராக வீட்டுக்குப் போ...'' என்றாள்.

கூர்க்கா பணிவாகக் கதவைத் திறந்து வழிவிட, கார் தெருவில் இறங்கி திரும்பியதும், அத்தனை நேரமாக அடக்கி வைத்திருந்த கண்ணீர் சத்தம் போடாமல் கண்களில் இறங்கிற்று. நெஞ்சுக்குள் கேவல் எழுந்து எழுந்து அடங்கிற்று. உப்புக்கரிப்பாக அம்மாவின் நினைவு கரிக்கத் தொடங்கியது. மனசு 'அம்மா, நீயா, நீயா இப்படி' என்று விசும்பிற்று...

'அடக்கமாகப் பட்டுப் புடவைத் தலைப்பால் இழுத்துப் போர்த்திக் கொண்டு மேடையில் உட்காருகிற அந்த அம்மாவா?.. யார் வீட்டிற்கு வந்தாலும் தள்ளி நிறுத்திக் கைகூப்புகிற அம்மாவா...? முகத்தில் தெரிகிற தெய்வீகமும், சாந்தமான அழகும்... அதே அம்மாவையா சற்று முன் போட்டோவில் பார்த்தேன்... அம்மா நீயா அது...? நீதானா...? நீதான் என்றால் இனி அம்மா என்கிற புனிதமான வார்த்தை உனக்கு எதற்கு...? அந்த உறவு தான் எதற்கு...? இனிமேல் நீ புவனேஸ்வரி. அப்பாவின் பெயரை இனிஷியலாகக் கூட முன்னால் வைத்துக் கொள்கிற தகுதியற்ற புவனேஸ்வரி. அதனால்தான் அப்பாவின் பெயரைச் சேர்த்து வைத்துக் கொள்ளக் கூச்சப்பட்டு வெறும் திருமதி புவனேஸ்வரி என்று போட்டுக் கொள்கிறாயா...?'

நினைத்து நினைத்து உள்ளுக்குள்ளேயே கூசிக் குறுகிப் போனாள். டிரைவருக்குத் தெரியாமல் கண்களை அடிக்கடி துடைத்து விட்டுக் கொண்டாள். அந்த நேரத்தில் அர்ஜுனையோ, பாஸ்கரப்பாவையோ பார்ப்பதற்குக் கூடக் கூசினாள். அவர்களெதிரில் தாங்க முடியாமல் உடைந்து போவோம் என்ற பயம் ஏற்பட, டிரைவரிடம் சொன்னாள்:

''வீட்டிற்கு வேண்டாம். நேராக ஹாஸ்டலில் என்னை இறக்கி விட்டு வீட்டிற்குப் போ கிஷன்...''

''அச்சாஜி...''

ஹாஸ்டல் வாசலில் இறக்கி விட்டபின்,

''சாப் கேட்டால் என்ன சொல்ல...?'' என்ற கிஷன் மல்ஹோத்ராவின் பணிவான கேள்விக்கு, சற்று யோசித்துச் சொன்னாள், கிருத்திகா:

''ரொம்பத் தலைவலியாக இருந்தது என்று நேராக ஹாஸ்டலுக்குப் போய் விட்டார்கள். நாளைக்குப் போன் பண்ணுகிறேன் என்று சொன்னார்கள் என்பதை மட்டும் சொல்லி விடுங்கள்...''

''அச்சா... குட்நைட் மேம்ஸாப்...''

''குட்நைட்.''

அறைக்குள் நுழைந்து உடையைக்கூட மாற்றாமல் கட்டிலில் விழுந்தாள் கிருத்திகா. அவளது அறையைப் பகிர்ந்து கொள்கிற ஈரானியப் பெண் இன்னமும் வரவில்லை. அல்லது வேறு எந்த அறையிலாவது உட்கார்ந்து அரட்டை அடித்துக் கொண்டிருப்பாள். பொதுவாகப் படுக்கிற நேரம், உடைமாற்றி அலங்காரம் பண்ணிக் கொள்கிற நேரங்களைத் தவிர மற்ற சமயங்களில் அந்த ஈரானியப் பெண் அறையில் இல்லாதது கிருத்திகாவிற்கு வசதியாகவே இருந்தது. அதுவும் அப்போதைய மனநிலையில் தனிமை தேவைப்பட்டது. யாருமற்ற அறையில் கதவை மூடித் தாழிட்டபின் ஓவென்று அழ வேண்டும் போலிருந்தது. நம்புகிறவர்களின் துரோகம் தாங்க முடியாதது என்று தோன்றிற்று. கூடவே நம்பாதவர்களை ஏமாற்றவே முடியாது. காரணம் நம்பாத காரணத்தினாலேயே அவர்கள் ஜாக்கிரதையாக இருப்பார்கள். நம்புகிறவர்கள் தான் அஜாக்கிரதையுடன் நடந்து கொள்வார்கள். அதனால் அவர்களை ஏமாற்றுவது சுலபம் என்கிற எண்ணமும் வந்தது.

'அளவிற்கு அதிகமான நம்பிக்கை வைத்த காரணத்தினாலேயே அம்மா தன்னை ஏமாற்றி விட்டாள். தன்னை மட்டுமின்றி அவனையே அவள் ஏமாற்றிக் கொண்டிருக்கிறாள். அந்த முகம், அதன் அழகு (புனிதம் என்று இத்தனை நாள் தான் நினைத்துக் கொண்டிருந்தது) அடக்கம் எல்லாமே பொய். ஏமாற்று வேலை. அத்தனையும் நடிப்பு, கைதேர்ந்த நடிப்பு... தன்னிடமே நடித்திருக்கிறாள். அவனுக்கும் இந்த விஷ்ணு பிரஸாத்திற்கும் தொடர்பு இல்லை என்றால் எதற்காகத் தான் இருக்கிற படத்தைக் கொடுக்க வேண்டும்? எந்தக் காரணத்திற்காகக் கொடுத்திருக்கிறாள்? ஏன் கடிதம் தவறாமல் அவனைப் போய்ப் பார் என்று வற்புறுத்தினாள்? ஒரு வேளை தன்னையும் இந்த விஷ்ணு பிரஸாத்திடம்...?'

குமட்டிக் கொண்டு வந்தது. அழுகை அடங்கி அசாத்தியமாகக் களைப்பு மேலிட்டது. சிந்தித்து சிந்தித்து மூளை மரத்துப் போயிற்று. இனி அம்மாவைப் பார்க்கக்

# புதிது நாசிலிர்க்கும் ஆரஞ்சுச் சுவையுடன் தனிச்சிறந்த சக்தி பானம்!



விட்டமின்-ஸி
செறிந்தது




புதிய க்ளுகோன்-ஸி, க்ளுகோஸ் அடங்கியது. உங்கள் குழந்தை சுறுசுறுப்புடன் துள்ளிவிளையாட, விரைந்து சக்திதரும் வசதியான உணவு.

மேலும், விட்டமின்-ஸி செறிந்தது. விட்டமின்-ஸி குழந்தைகளின் பற்கள், எலும்புகள், திசுக்கள் இவை வளர உதவுகிறது.

நான்கு தேக்கரண்டி க்ளுகோன்-ஸி எடுத்து, ஒரு டம்ப்ளர் ஐஸ் தண்ணீரில் இட்டுக் கரைக்கவும், புத்துணர்ச்சியூட்டும் பானம் தயார்—நாசிலிர்க்கும் ஆரஞ்சுச் சுவையுடன்; தினம் இருமுறை உங்கள் குழந்தைக்கு இதைக் கொடுங்கள்.



# க்ளுகோன்-ஸி

கூடாது என்கிற வைராக்கியம் ஏற்பட்டது. சென்னை பக்கம் திரும்பக் கூடாது. அவள் பணத்தில் படிக்கக் கூடாது. அவள் எடுத்து தந்த உடைகளை அணியக் கூடாது. அம்மா என்கிறவளின் வாசனையில் அணு அளவும் தன் மீது பதிய கூடாது...

அதன் முதற் கட்டமாக உடனே நாளையி லிருந்தே கல்லூரிக்குப் போகாமல் படிப்பை நிறுத்தியாக வேண்டும். ஹாஸ்டலை காலி பண்ணி — எங்கே போவது...? அர்ஜுனின் வீட்டை விட்டால் தனக்கு வேறு எந்த பாதுகாப்பான இடமிருக்கிறது...? வேறு யாரைத் தெரியும்...? அர்ஜுனுக்கு அம்மா வைப் பற்றித் தெரிந்தால் என்ன நினைப் பார்...? அப்படிப் பட்டவளின் பெண் தானே இவள் என்கிற உணர்வு தோன்றி விடுமோ...? அர்ஜுனின் மதிப்பிலிருந்து தாழ நேரிடுமோ... அவரிடம் சொல்லா மலே இருந்து விட்டால்...?

திடீரென்று படிப்பை நிறுத்தி ஹாஸ் டலையும் விட்டு காலி பண்ணினால் காரணம் கேட்பாரே...? என்ன சொல்வது? கம்பீர மும், கண்ணியமும், உயர்ந்த குறிக்கோள் களும் கொண்ட பாஸ்கரப்பா கேட்பாரே..? அவருக்கு என்ன பதிலைச் சொல்ல முடியும்?

அதுபோல் தனக்கு மட்டும் ஏன் ஒரு அப்பா இல்லை? கண்ணியமான அம்மா இல்லை...? நல்ல குழந்தைகள் பிறக்க மட்டும் தான் புண்ணியம் செய்திருக்க வேண்டு மென்பதில்லை. நல்ல பெற்றோர் அமையக் கூடப் புண்ணியம் தான் செய்திருக்க வேண் டும்...

"கிருத்திகா போன் கால் ஃபார் யூ"— கீழேயிருந்து குரல் வந்தது.

அர்ஜுனாகத்தான் இருக்கும் என்ற நினைப்பில், அவனுக்கு என்ன பதில் சொல் வது என்கிற யோசனையுடன் கீழே இறங்கி வந்து ரிஸீவரை எடுத்து மெதுவாக ஹலோ சொன்னாள்.

எதிர்ப் பக்கத்திலிருந்து "நான்தான் விஷ்ணு பிரஸாத் பேசுகிறேன்..." என்கிற கோபமான கட்டைக் குரல் வயிற்றிற்குள் சில்லென்ற ஒரு பய உணர்வைத் தோற்று விக்க, ஒன்றுமே பேசாமல் சட்டென்று ரிஸீவரை வைத்தாள் கிருத்திகா...

(தொடரும்)

# கிழிக்கப்பட்ட தந்தி

ஜோதிர்லதா கிரிஜா

விசாலம் தந்தியைப் பிரித்துத் தனக்குத் தெரிந்த அரைகுறை ஆங்கிலத்திலிருந்து அதன் செய்தியை நன்றாகவே புரிந்து கொண்டாள்.

''அப்பா மருத்துவவிடுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறார். உடனே புறப்படு'' என்று ராதாவின் அண்ணாதான் தந்திகொடுத்திருந்தான். தந்தி வந்த நேரத்தில் ராதா வீட்டில் இல்லாதது நல்லதுக்குத்தான் என்று எண்ணிக் கொண்ட விசாலம் அதை மறுபடியும் நான்காக மடித்துக் கண் மறைவாக வைத்துவிட்டுச் சமையலறைக்குள் நுழைந்தாள். தான் செய்வது நியாயமான வேலை இல்லை என்ற உறுத்தல் கொஞ்சம் போல் நெஞ்சில் ஓர் ஓரத்தில் நெருடத்தான் செய்தது. இருந்த போதிலும் இன்று குடும்பம் இருக்கும் நிலையில் ராதாவை அனுப்பி வைப்பது அசட்டுத்தனம் — என்று அவள் தன்னைத்தானே சமாதானம் செய்து கொண்டாள். பிறந்த இடத்தை விடவும் புகுந்த இடமே தலையாயது என்று தனக்குள் தனது செயலை முறைமைப்படுத்திக் கொண்டாள்.

ராதாவுக்கு நான்கு தங்கைகள் இருக்கிறார்கள். அவர்களும் அண்ணாவின் தந்தி கைக்குக் கிடைத்து அப்பாவைப் 'பார்க்கப் புறப்பட்டுப்போயிருப்பார்கள். இவள்போய்ச் சாதிக்கப் போவது எதுவுமில்லை. அப்படி ஏதாவது ஆகிவிட்டால் மறுபடியும் தந்தி வரத் தான் போகிறது. அப்போது போய்க் கொள்ளட்டுமே என்று தனதுசெயலுக்கு விளக்கம் கூறிக் கொண்டாள்.

மாமனாரும் கிட்டத்தட்ட அப்பாவுக்குச் சமந்தானே? இங்கே மாமனார் விழுந்து கிடக்கிறார். அவரையும் தான் மருத்துவ விடுதியில் சேர்த்திருக்கிறது. பகல் முழுவதும் ராதா அங்கே இருக்க வேண்டியிருக்கிறது. இரவுக்கு விசாலம் போய்ப் பார்த்துக் கொள்ளுகிறாள். மணிக்கோ அலுவலகத்தில் விடுப்புக் கொடுக்க முடியாது என்று சொல்லி விட்டார்கள். மருந்து வாங்குகிற வேலை ஒன்றை மட்டும் தான் அவனால் உருப்படியாகச். செய்ய முடிகிறது. மற்ற வேலைகளையெல்லாம் விசாலமும் ராதாவும் தாமே செய்ய வேண்டி உள்ளது. இந்த நிலையில் அவளை ஊருக்கு அனுப்பி விட்டுத் தன்னால் எப்படிக் காலந்தள்ள முடியும்? என்று தன்னைத் தானே கேட்டு மனச்சான்றின் முணுமுணுப்பை அடக்கிவிட்ட விசாலம் சாமி விளக்கை ஏற்றிக் கும்பிட்டுவிட்டு, 'பகவானே, ராதாவின் அப்பாவுக்கு ஒன்றும் ஆகாமல் இருக்க வேண்டும்' என்று வேண்டிக் கொண்டாள்.

தந்தி வந்ததைத் தான் மறைத்தது தானைக்கு என்றாவது ராதாவுக்குத் தெரிய வந்தால் அவளுக்கு எப்படி இருக்கும் என்பதை நினைத்துக் கலக்கம் சிறிது வந்தாலும், இப்போதைக்கு அதை மறைப்பதைத் தவிர வேறு வழியே இல்லை என்று சமாதானமுற்றாள்.

வாசற் கதவு தட்டப்பட்டது. எட்டிப் பார்த்தாள். அடுத்த வீட்டு மங்களம்தான். விசாலத்திற்கு அடிவயிற்றில் கலக்கம் விளைந்



தது. தந்திச் சேவகன் வந்து சென்றதைப் பார்த்து விட்டுத்தான் அவள் என்ன சேதி என்று கேட்க வந்திருக்கிறாள் என்று எண்ணி விநாடிப் பொழுதுக்குள் அவளுக்கு என்ன சொல்ல வேண்டும் என்பதைத் தீர்மானித்து விட்டாள்.

கதவைத் திறந்ததும் மங்களம் இயல்பாக உள்ளே வந்து ''தந்தி வந்தது போலிருக்கே? ஒண்ணும் கவலைப்படும்படியான சேதி இல்லையே?'' என்று கேட்டாள்.

எச்சிலை விழுங்கிய விசாலம், ''நான்கூட முதல்ல பயந்து போயிட்டேன். அப்படி ஒண்ணுமில்லே. மதுரையிலிருந்து என் பொண்ணுதான் அடிச்சிருந்தா. அப்பாவுக்கு இப்ப உடம்பு எப்படி இருக்குன்னு கேட்டு'' என்று பதில் சொன்னாள்.

''என்னதான் சொல்லுங்கோ. தந்தின்னதும் வயித்தைக் கலக்கத்தானே செய்யறது? ஆனா இப்பல்லாம் தின்னா தந்தி. உக்காந்தாத் தந்தின்னு இதுக்குத்தான் தந்தி குடுக்கறதுங்கிற விவஸ்தையே இல்லாம எல்லாத்துக்கும் தந்தி குடுத்துடறானே. பரீட்சையில பாஸ் பண்ணினா தந்தி. பெயிலானாத் தந்தி. பிறந்தநாள் வாழ்த்து அது இதுன்னு எல்லாத்துக்கும்தான் தந்தி அனுப்பறா. ஆனாலும் நமக்கெல்லாம் தந்தின்னாலே கெட்ட சமாசாரத்தைப் பத்தின பயந்தானே முதலில் வருது?'' என்ற மங்களம் சிறிது நேரம் உட்கார்ந்து பொதுவாகப் பேசிக் கொண்டிருந்த பிறகு கிளம்பிப் போனாள்.



விசாலம் கதவைச் சாத்திக்கொண்டு உள்ளே வந்ததும் சைக்கிள் மணியோசை கேட்டது. மகனின் வருகையைத் தெரிந்து கொண்ட அவள் மறுபடியும் கதவைத்திறந்தாள். களைத்துப் போன முகத்துடனும், சோர்ந்த நடையுடனும் மணி சைக்கிளைத் தள்ளிக் கொண்டு உள்ளே வந்தான். தந்தியைப் பற்றி மகனிடம் சொல்லுவதா, வேண்டாமா என்பது குறித்துத் தான் இன்னும் யோசிக்காதது அவளுக்கு ஞாபகம் வந்தது.

''மங்களம் மாமி வந்துட்டுப் போனாப் போலிருக்கே? என்ன வம்புக்கு வந்தா?'' என்று அவன் விசாரிக்கவே தந்தியைப் பற்றிச் சொல்லியாக வேண்டிய கட்டாயம் விளைந்து விட்டதை உணர்ந்து, குரலைத் தாழ்த்திக் கொண்டு, ''நீ முதல்ல கைகால் அலம்பிண்டு டிபன், காப்பி சாப்பிடு தந்தி வந்தது. அதைப் பத்தி அப்புறம் பேசலாம்...'' என்றாள்.

ஆனால் மணிக்குப் பொறுக்கவில்லை. ''என்னம்மா தந்தி அது? டிபனுக்கென்ன? அப்புறம் பார்த்துக்கலாம்? தந்தியைக் கொண்டா!'' என்றான்.

தந்தியைக் கொண்டு வந்து பிரித்துக் கொடுத்த விசாலம், அவன் அதைப் படித்துக் கொண்டிருக்கையிலேயே ''மணி ஒண்ணு சொல்லட்டுமா...? இந்தத் தந்தி வந்திருக்கிற விஷயம் ராதாவுக்கு இப்பத் தெரிய வேண்டாம்...'' என்று சொல்லத் தொடங்கியதை முடிக்க விடாமல், ''அப்படின்னா?'' என்று அவன் இடைமறித்தான்.

''ராதாவுக்குக் கூடப் பிறந்த தங்கைகள் நிறைய பேர் இருக்காடா. ஒத்தாசைக்கு எல்லாருமே வந்திருப்பா. இவ போய்த்தான் கிழிக்கணும்னுட்டு ஒண்ணுமில்லே. நமக்கு அப்படி இல்லே பாரு. அதுக்குத் தான் சொல்றேன், மறைக்கணும்னுட்டு இல்லே. விஷயத்தைச் சொல்லிட்டு அவளைப் போக விடாமத் தடுத்து அவ மனசை கஷ்டப்படுத்தறதை விட, அதைச் சொல்லாமலே இருந்துடறது நன்னாயிருக்குமேன்னு பார்க்கறேன். வேற ஒண்ணுமில்லே'' என்று விசாலம் தனது முடிவை அவன் மீது திணிக்கும் வகையில் விளக்கமாய்ப் பேசினாள்.

''ஆமா. அது நியாயமா, அம்மா? அவளுடைய அப்பாவுக்கு சீரியஸ்னு அவ அண்ணா தந்தி குடுத்திருக்கான். எல்லாரும் வந்திருப்பாங்கறியே, இவ மட்டும் போக வேண்டாம்னு அவசியமில்லையா? நீ பேசறது எனக்குச் சரியாப் படல்லே.''

விசாலத்துக்குச் சுருக்கென்று எரிச்சல் வந்தது. இருந்தாலும், அதை முழுவதுமாய்க் காட்டாமல், "நாளைக்கு அந்த மனுஷனுக்கு ஏதாவது ஆயிட்டா அனுப்பி வைக்காமயா இருக்கப் போறேம்? அப்படி ஒண்ணும் கல் மனசு இல்லே எனக்கு. நான் எதுக்குச் சொல்றேன்னு, ராதாவை இப்ப அனுப்பி வைச்சுட்டா அப்புறம் பகல் நேரத்துல உங்கப்பாவோட இருக்கிறது யாரு? உன்னால தான் லீவு போட முடியாதுன்னிட்டியேடா?" என்று அவனை மடக்கினாள்.

அவன் வாய் அடைத்துப் போயிற்று.

"அவளை அனுப்பிட்டா யாரு சமையல் பண்றது? நான் மூணு நாளும் நர்ஸிங் ஹோம்ல உக்காந்தா, நீ சமையல் பண்ணிக் கஞ்சியும் காபியும் — வெச்சு எடுத்துண்டு வருவியா? இல்லே, ராத்திரி நேரத்துல வந்தாவது உங்கப்பாவுக்கு ஒத்தாசையா அங்க போய்ப் படுத்துப்பியா? உங்கப்பாவோ ராத்திரி பத்து தரம் பாத்ரூமுக்குப் போக எழுந்திருப்பார். ராத்திரி அடிக்கடி தூக்கம் கலைஞ்சு எழுந்தியானா மறுநாள் உன்னால ஆபீசுக்குப் போய் வேலை செய்ய முடியுமாடா?"

அவன் வாய் இன்னும் இறுக்கமாய் மூடிக் கொண்டது. அப்பாவுக்குப் பணிவிடை செய்வது என்பது அவனைப்பொறுத்த வரையில் விளக்கெண்ணெய் குடிப்பது போல் தான். அவருடைய வயசான காலத் தொணதொணப்பை அவனால் தாங்கவே முடியாது. தன்னுடைய சொந்த வேலைகளுக்கே மனைவியைச் சார்ந்து, அவளிடமிருந்து பணிவிடைகளை எதிர்நோக்கும் அவனால் பிறருக்குப் பணிவிடை செய்வது குறித்து நினைத்துப் பார்க்க இயலாது. இந்த நிலையில் அம்மா செய்துவிட்ட முடிவை ஏற்பது தவிர வேறு வழியே அவனுக்கு இல்லாது போயிற்று.

தனது மன உறுத்தலை ஒரு பக்கமாக ஒதுக்கிவிட்டு அவன் பெருமூச்சு விட்டவாறு, "அப்படின்னா ராதாவுக்குத் தெரியவே கூடாதுங்கறியா?" என்றான்.

"ஆமாண்டா. பக்கத்தாத்து மாமி இன்னிக்குத் தந்தி வந்தது பத்தி அவ இட்ட ஏதானும் பேச்சு வாக்குல சொன்னா, அது நம்ம ருக்கு அப்பாவுக்கு எப்படி இருக்குன்னு கேட்டு அடிச்ச தந்தின்னு சொல்லிட்டாப் போறது."

"அப்ப இந்தத் தந்தியைக் கிழிச்சுப் போட்டுடறேன்" என்றவாறு மணி அதைச் சுக்கலாக்கிச் சன்னல் வழியாகத் தெருவில் வீசினான்.

"நாளைக்கு அவ அண்ணா அவ இட்ட இதைப் பத்திச் சொல்லாம இருப்பானா?"

"அதென்னடா பெரிய விஷயம்? தந்தி வரவே இல்லைன்னு சொல்லிட்டாப்போச்சு. இப்ப அவளை ஊருக்கு அனுப்பிட்டா இங்க நாறின்னு போகும்? இல்லைன்னு நீ ஒரு மாசம் லீவு போடு" என்று மறுபடியும் அவனது பலமற்ற பகுதியைச் சீண்டிவிட்டு அவள் அவனுக்குக் காப்பி கலக்க அடுக்களைக்குள் புகுந்தாள்.

அவனுக்கு விடுப்புக் கிடைக்காது என்பதில்லை. இருந்த போதிலும் மருத்துவ விடுதியில் உட்கார்ந்து அப்பாவின் தொணதொணப்பையும் அவருக்குச் செய்ய வேண்டி வரக் கூடிய பணிவிடைத் தொல்லைகளையும் தவிர்ப்பதற்காகவே அவன் தனக்கு விடுப்புக் கொடுக்க அலுவலர் மறுத்து விட்டதாகப் புளுகி வைத்திருந்தான். இதையெல்லாம் யோசித்த போது, அம்மாவின் சதிக்கு அவன் இணங்க வேண்டியதாயிற்று.

அம்மாவைச் சைக்கிளில் உட்கார்த்தி அழைத்துப் போய் மருத்துவ விடுதியில் விட்டுவிட்டு மனைவியுடன் சைக்கிளில் அவன் வீடு திரும்பிய போது இரவு மணி எட்டு. பகலெல்லாம் ஓய்வின்றி மாமனாருக்குப்பணிவிடை செய்து களைத்துப் போயிருந்த ராதா தானும் அவனுமாக உட்கார்ந்து சாப்பிட்டு எழுந்த போது மணி ஒன்பது. அந்நேரத்துக்கு மேல் மாமியார் அரைகுறையாய்ப் போட்டுச் சென்றிருந்த வேலைகளை முழுமையாய்ச் செய்து முடித்துப் படுக்கப் போன போது மணி பதினொன்று ஆகியது.

"ராதா, இன்னிக்கு சைக்கிளிங் ரொம்பப் பண்ணிட்டேன். காலெல்லாம் ரணமா வலிக்கிறது. கொஞ்சம் பிடிச்சு விடேன்." என்று அவன் குழைந்த போது "உங்க காலைப் பிடிச்சு விடறதுக்கு என் கையில வலு வேண்டாமா?" என்று மென்மையாய்ச் சிரித்து நாசூக்காய் அவனது வேண்டுகோளைப் புறக்கணித்தாள்.

திடீரென்று, "என்னமோ தெரியலே. இன்னிக்குக் காலையிலேருந்து எனக்கு எங்கப்பா நினைவாகவே இருக்கு. அடிக்கடி நினைச்சுக்கறேன். உடம்பு கிடம்பு சரியில்லையோ, இல்லைன்னா என்னை அடிக்கடி இன்னிக்கு அவர் எதுக்கானும் நினைச்சுக்கறாரோ, தெரியலை. அப்பாவைப் போய் ஒரு நடை பார்த்துவிட்டு வந்தாக் கூடத் தேவலை. ஆச்சே, உங்கப்பா மாதிரி அவருக்

---

உதட்டுக்கு நிறத்தைக் கொடுக்க 'லிப்ஸ்டிக்' இருப்பது போல் பல்லுக்கு வெள்ளை நிறத்தைக் கொடுக்க 'காஸ்மடிக் - எனாமல்' என்ற சாயம் மேலை நாடுகளில் கிடைக்கிறது. பல் பளிச்சிட இந்த எனாமலைப் பல்லில் பூசிக் கொள்கிறார்கள்!

—எஸ். விஜயா சீனிவாசன்.



மின்னும் மேனி
மெருகுக்கு ரெக்ஸோனா




மின்னி மிளிரும் மேனி... என்றும் உங்கள் பொன்னான கனவு...நிறைவேற வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா (தேவதாரம்) ஆகிய நாலு வகை இயற்கைத் தைலங்களின் நற்கலவையான ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு இயல்பான வழியாகும்.

**ரெக்ஸோனா** உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைத்திருக்கிறது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 84 2012 TM



## அருள் வாக்கு

எல்லாப் பரோபகாரங்களையும் விட உத்தமமானது ஒரு ஜீவனைப் பரமாத்மாவிடம் சேர்க்கிறது தான். ஆகையால் நாம் செய்கிற நாம உச்சாரணத்தால் அந்திமத்தில் ஒரு ஜீவன் பகவானை நினைக்கும்படியாகப் பண்ணி, அதனால் பகவான் அந்த ஜீவனை எடுத்துக் கொள்ளச் செய்து விட்டால் அதைப் போன்ற உபகாரம் வேறே எதுவும் இல்லை.

கடைசி கால ஈச்வரஸ்மரணை ஜன்மாவை அப்படியே அழித்து விடாவிட்டால் கூடப் பரவாயில்லை. நிச்சயம் அது பாபத்தைப் பெரிய அளவுக்கு அலம்பி விட்டுவிடும். இதைப்பற்றி ஸந்தேஹமில்லை. பகவந் நாமா மனஸுக்குள்ளே ஊறி விடுகிற போது பாபத்தை நிச்சயம் கழுவிவிடும். ஆனதால் பகவந் நாமாவோடு கண்ணை மூடுகிறவன் ஜன்மாவே இல்லாமல் விடுபட்டு விடுகிறான் என்று வைத்துக் கொள்ளாவிட்டாலும் மறுபடியும் பாப ஜன்மா எடுக்கவே மாட்டான். நல்ல புண்ய ஜன்மாவாக எடுப்பான் என்பது நிச்சயம்.

புண்ய ஜன்மாவென்றால் பணம், காசு, அழகு, உசந்த ஜாதி இதுகளா? இல்லை. இந்த ஜன்மா முடிவிலே வந்த பகவத் ஸ்மரணை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து அடுத்த ஜன்மாவிலும் எப்போது பார்த்தாலும் இருக்கும்படியான சூழ்நிலையும் மனநிலையும் கொண்டது தான் புண்ய ஜன்மா. அப்படி எடுத்து அடுத்த ஜன்மத்தோடாவது சொந்த முயற்சியினாலேயே ஸம்ஸார நிவர்த்தியைச் சம்பாதித்துக் கொள்ள ஒரு ஜீவனுக்கு இந்த ஜன்மத்திலேயே அந்திம நேரத்தில் நாம் நம்மாலான ஸஹாயத்தைப் பண்ண வேண்டும்.

**-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்**

ரும் எழுபது வயசாச்சு. என்னிக்குப் படுக்கையில விழுந்துக்கப் போறாரோ, தெரியாது. ஆறு உங்கப்பா இங்கே இப்படிப் படுக்கையாக் கிடக்கறச்சே நான் எங்க அங்கே போக முடியப் போறது? போறேன்னு சொன்னாலும் அம்மாதான் விட்டு விடுவாரா?'' என்று பெருமூச்சு விட்டுவிட்டுக் கணவனின் பதிலுக்குக் காத்திருந்தாள்.

மணியின் மார்பு அடித்துக் கொண்டது. உடனே அவள் புலம்பலுக்கு எந்த ஒரு பதிலையும் சொல்ல முடியாமல் அவன் வாய் உலர்ந்து போயிற்று.

''என்ன பேசாம இருக்கேள்? ஒரு நாளு நாள் போய் எங்காத்துல இருந்துட்டு வர்றேனே?''

''அப்புறம் நர்ஸிங் ஹோம்ல யாரு போய்ப் பகல் முழுக்கத் தங்கறது?''

''நீங்கதான். ஒரு நாளு நாள் லீவ் கூடவாத் தர மாட்டா உங்க ஆபீஸிலே?''

''தர மாட்டாதான் ராதா. இப்ப இன்ஸ்பெக்ஷன் டைம். இன்னும் ரெண்டு மூணு மாசத்துக்கு வாயே திறக்கமுடியாது.''

''ஊர்லருந்து உங்க தங்கையை வரவழையுங்களேன். ருக்குவுந்தான் இங்க வந்து உங்கப்பாவைக் கொஞ்ச நாள் பார்த்துக்கட்டுமே?''

''ருக்குவை அவ மாமியார் அனுப்பணுமே?''

ராதா சடக்கென்று படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள். ஆத்திரத்துடன், ''நல்ல கல்யாணம், நல்ல எழவு. அவ அப்பாவைப் பார்க்க அவளை அவ மாமியார் அனுப்ப மாட்டா. எங்கப்பாவைப் பார்க்க உங்கம்மா என்னை அனுப்ப மாட்டா... ஆறு ருக்கு வீட்டுப் புக்காத்துக் காரானை வாய்வலிக்கத் திட்ட. மட்டும் உங்கம்மாவுக்குத் தெரியறது. இங்க மட்டும் என்ன வாழுதாம்? நேத்து உங்கம்மா எப்படித் திட்டினா தெரியுமா ருக்குவுடைய மாமியாரை? நானுந்தான் அஞ்சாறு மாசமா எங்கப்பாவைப் பார்க்கணும் போல இருக்குன்னு சொல்லிண்டிருக்கேன். அது உங்கம்மா காதுல ஏர்றதோ..?'' என்று அழமாட்டாத குரலில் புலம்பினாள்.

அவனால் பதில் பேச முடியவில்லை. சன்னலுக்கு வெளியே அவன் வீசி எறிந்திருந்த தந்தியின் சுக்கல்களில் ஒன்றிரண்டு முழுதாகித் திரும்பவும் ஜன்னலின் வழியே உள்ளே வந்து அவள் கண்ணில் பட்டு விடுமோ என்று முட்டாள்தனமான அச்சத்தில் கணம்போல் ஆழ்ந்து பின் தனது அசட்டுத் தனத்துக்காகத் தன்னையே அவன் கேலி செய்து சிரித்துக் கொண்டான்.

''என்ன சிரிக்கிறேள்? என் துக்கம் உங்களுக்குச் சிரிப்பாய் இருக்கா?''

வாசலில் சைக்கிள் மணியும் தந்திச் சேவகன் அறிவிப்பும் கேட்டன. மணி பதற்றத்துடன் எழுந்து போய்த் தந்தியை வாங்கினான்.

ராதாவின் தந்தை காலமான செய்தியைத் தாங்கி அந்தத் தந்தி வந்திருந்தது. அவன் சற்றே நடுங்கிய கையால் அவளிடம் அதை நீட்டிவிட்டு மௌனமாக நின்றான்.

## விசேஷ பரிசுகளுடன்

# டெபாசிட் சேகரிப்பு விழா!

(15-7-84 முதல் 31-10-84 வரை
வாடிக்கையாளர்களின் வேண்டுகோளுக்கிணங்க நீடிக்கப்படுகிறது)

**22%** வட்டி வழங்கப்படுவதுடன்
**V. I. P. BRIEF CASE**
அன்பளிப்பும் வழங்கப்படும்.

மற்றும் மேற்படி காலத்தில் டெபாசிட் செய்பவர்கள் ஒவ்வொருவரும் விசேஷ பரிசு போட்டியில் கலந்துகொள்ளும் வாய்ப்பை பெறுவார்கள். சென்னை கிளையில் டெபாசிட்தாரர்கள் முன்னிலையில் நடைபெறும் பரிசு போட்டியில் வெற்றி பெறுபவர்களுக்கு

| முதல் பரிசு | இரண்டாவது பரிசு | மூன்றாவது பரிசு | நான்காவது பரிசு |
|---|---|---|---|
| **கலர் TV** | **குளிர் சாதனப் பெட்டி** | **வாஷிங் மெஷின்** | **பிளாக் & ஒயிட் TV** |
| (அல்லது ரூ. 10,000/- ரொக்கம்) | (அல்லது ரூ. 5000/- ரொக்கம்) | (அல்லது ரூ. 4000/- ரொக்கம்) | (அல்லது ரூ. 3000/- ரொக்கம்) |
|  |  |  |  |

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| **17%** | **18%** | **19%** | **22%** |



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

சென்னை : 91, உஸ்மான் ரோடு (சிவா-விஷ்ணு கோயில் அருகில்)
தி. நகர், சென்னை-600 017 போன் : 447186 — 442218

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)
மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971

திருச்சி : 22, மதுரை ரோடு (முதல் மாடி) திருச்சிராப்பள்ளி-620 008

பாண்டிச்சேரி : 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்) பாண்டிச்சேரி-605 001

தஞ்சாவூர் : எண் : 2 & 3, முதல் மாடி, ஜி. ஏ. கனால் ரோடு,
தஞ்சாவூர்-613 001, போன் : 1626

திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601 போன் : 463

பட்டுக்கோட்டை : 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை-614 601 போன் : 453

---

**டெபாசிட்தாரர்களை அறிமுகம் செய்பவர்களுக்கும் அன்பளிப்பு வழங்கப்படும்.**

CHARI

## சைலே...ன்ஸ்

நடிகர் சங்கக் கட்டிடத்தில் 'ஆலய தீபம்' தெலுங்கு ரீமேக். ஒரு சின்ன டான்ஸ் மூவ்மெண்ட்டில் ஏகக் குழறுபடி பண்ணி, ஸ்ரீதரின் உயிரை வாங்கிக் கொண்டிருந்தார், இளவரசி.

ஷாட் இடைவேளையில் இளவரசியின் மேக்கப் ரூமைத் தட்டினேன். நாலடி நாலங்குலத்தில் ஒரு பையன் தலையை நீட்டி, ''யார் நீங்க?''

விவரத்தைச் சொல்லி, உத்தரவோடு உள்ளே நுழைந்தேன்.

இளவரசி இப்போது தமிழ், தெலுங்கு தவிர கன்னடத்திலும் நடித்துக் கொண்டிருக்கிறாராம்.

''கதாநாயகி அந்தஸ்துக்கு உயர்ந்ததும், முன்பு செகன்ட் ஹீரோயின் ரோல்களில் நடிக்க ஒப்பந்தமான படங்களில் இருந்து கழற்றிக் கொள்ள முயல்கிறீர்களாமே.... அப்படியா?'' என்றேன்.

சட்டென்று பதில் சொல்ல வராமல், சிரித்தார் — சிரித்தார் — சிரித்தார். நானாக அடுத்த கேள்விக்குப் போய் விடுவேன் என்று அவர் எதிர்பார்த்தது பலிக்காததும், பக்கத்தில் இருந்த மேக்கப் மேனைப் பார்த்து ''என்னங்க ரகுபதி. கேட்கிறாங்க சொல்லுங்களேன்'' என்றார்.

ரகுபதி, ''இந்தக் கேள்விக்கெல்லாம் வீட்ல உள்ள பெரியவங்க தாங்க பதில் சொல்லணும். பாப்பாவுக்குத் தெரியாது!'' என்றார்.

சிரிக்கலாம் என்று நினைத்தேன். ஆனால் அது அழுகையை விட மோசமாக இருக்கும் என்பதால் விட்டு விட்டேன்.

○ இளவரசி

## காணாமல் போனது எப்படி?

'பாடும் வானம்பாடி' படப்பிடிப்பில் ராஜீவ், முன்னைக்கு இப்போது இளைத்திருந்தார். காரணம் — சமீபத்தில் இவரிடம் வந்து விட்டுப் போன டைபாயிடு ஜுரம்.

நல்ல கேரக்டர்களில் சிறப்பாக நடித்திருந்தாலும் போஸ்டரிலோ, பேனரிலோ இவரது படத்தைப் போடுவதில்லையாம் நமது தயாரிப்பாளர்கள்.

''கன்னடத்தில் ஆறு படம் நடித்திருக்கிறேன். அதில் நான்கு ரிலீஸ் ஆகி, ஹிட்டாக ஓடிக் கொண்டிருக்கிறது'' என்றார்.

ராஜீவ் எதிர்பார்ப்பது — வில்லத்தனமான ஹீரோ கேரக்டர்களைத் தான். கே. கே. நகரிலிருந்து இப்போது சாலிகிராமத்திற்கு குடி மாறி இருக்கிறார்.

இடையில் சில காலம் இவர் காணாமல் போய் விட்டதற்குக் காரணம் — ''பிற மொழிப் படங்களில் நடிக்கப் போய்விட்டது தான்'' என்றார்.

அப்போ, மீண்டும் திரும்பி வந்ததற்குக் காரணம்...?

## "அதுக்கும் நான்தான், இதுக்கும் நான் தான்!"

''அறிமுகமான முதல் படமே தோல்வி என்பதால்தான் எனக்குத் தமிழில் வாய்ப்புக்கள் வரவில்லை. மற்றபடி, என் திறமையில் எந்தக் குறையும் இல்லை'' என்றார், பானுப்ரியா.





○ ராஜீவ்

தெலுங்கில் 12 படங்களில் நடித்துக் கொண்டிருக்கிற அளவிற்கு பிஸியாம். தமிழ், தெலுங்கு தவிர இந்தி, இங்கிலீஷும் தெரியும் என்றார்.

''தமிழில் ஹீரோயினாகத்தான் பண்ணுவேன் என்று சொல்லவில்லை. நல்ல கேரக்டர் ரோல் எது வேண்டுமானாலும் செய்ய ரெடி. மெல்லப் பேசுங்கள் படத்தில் நடிக்கும் போதே நிறையத் தெலுங்குப்பட வாய்ப்புகள் வந்தன. மெ. பே. யை நம்பி அவைகளைக் கைவிட்டது தப்பாப் போச்சு. இருந்தும் என்ன. தெலுங்கில் எடுக்கும் அதே மெ. பே. க்கும் நான்தான் ஹீரோயின்'' என்றார்.

இந்த மெ. பே. யாவது இவருக்குப் 'பேப்பே' காட்டாமல் இருக்கவேண்டும்!

## ''அது அப்படித்தான்!''

பி. எஸ். வீரப்பாவைச் சந்திக்கப் போன சமயம், 'கடமை' படத்தின் டிஸ்கஷனில் இருந்தார். மறுநாள் படம் பிடிக்கவேண்டிய காட்சிகள் பற்றிய ஆலோசனையாம்.

பேசிக் கொண்டிருந்த போது, தயாரிப்பாளர்கள் — டிஸ்ட்ரிப்யூட்டர் — தியேட்டர்காரர்களின் சமீபகால தகராறு பற்றிய பேச்சு வந்தது.

''ஒவ்வொருத்தரும் தனித்தனி சங்கங்கள் அமைக்கப் போய்த்தான் இண்டஸ்ட்ரியில் ஒற்றுமையே இல்லாமப் போச்சு. இன்னும் இந்தத் துறையில் ஆபரேட்டர்கள், போஸ்டர் ஒட்டுபவர்கள் தான் சங்கக் கோரிக்கைகளோடு போராடத் துவங்கவில்லை. சீக்கிரம் அதுவும் வந்து விடும்'' என்றார் பி.எஸ்.வி.

''படுமசாலாத் தனத்திலிருந்து கொஞ்சம் விலையம்சமுள்ள படமும் தயாரிக்கலாமே?..''

அவர் சொன்ன பதில்:

''இன்னார் பாடல்களைக் கேட்க வேண்டும், இன்ன பதார்த்தங்களைச் சாப்பிட வேண்டும் என்றெல்லாம் எனக்கு ஆசையுண்டு. ஆனால் இன்ன மாதிரி படங்கள்தான் எடுக்க வேண்டும் என்ற நியதியை நான் வகுத்துக் கொள்ளவில்லை. ஏனென்றால் முதலீடு செய்யும் பணம் என்னுடையதல்லவா?''

## ''மோசமா நடிச்சே... அம்புட்டுத்தான்!''

பத்மா என்ற இயற்பெயர் கொண்ட ஜீவிதாவை ஏ. வி. எம். ஆறுவது ஃப்ளோரில் பார்த்தேன். ஜீவிதாவிற்குத் தாய் மொழி தெலுங்கு. வெகு நாட்களாய்ச் சென்னை வாசம் என்பதால், தமிழ் சரளமாக வருகிறது. கால்ஷீட் விவகாரங்களை இவர் அண்ணன் முரளியே கவனித்துக் கொள்கிறாராம். உ. கா. கிளியைத் தவிர மற்ற படங்களில் எல்லாம் சொந்தக் குரல் தானும்.

'உறவைக் காத்த கிளி' வெளி வருவதற்குள்ளாகவே நான்கைந்து படங்களுக்கு ஹீரோயின் ஆகி விட்டார். எப்படி? ''ஏதோ ராஜேந்தர் படத்தின் மீது இருக்கும் நம்பிக்கையில் ஏராளமான சான்ஸ். என் சிநேகிதிகள் கூட, 'பத்மா, நீ நடிக்கறதை ஊர் முழுக்கச் சொல்லி, ரொம்பப் பெருமையா இருக்கோம். நீ மோசமா நடிச்ச, பார்க்கிற ஆடியன்ஸ் எங்களைச் செருப்பெடுத்து அடிக்கிற மாதிரி பண்ணிடாதே' என்று கிண்டல் செய்கிறார்கள். அவர்களுக்காகவாவது நான் நல்லா நடிச்சாகணும்'' என்றார், அவரே.

-சம்பத்ஜி

படங்கள்: ஸ்பைடர்மேன்

## வாசகர் பங்கு



### ஆதிசங்கராச்சார்யா

மொழி புரியா விட்டாலும் முகபாவங்களே நெஞ்சைத் தொட்டு உலுக்கி விட்டன. பாத்திரத்துக்குப் பொருத்தமான நடிகர்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். காலடி முதல் கேதாரநாத் வரை இந்தியா முழுவதையும் ஒருமைப்படுத்தும் அற்புதமான படப்பிடிப்பு.

**வி. பிச்சமணி, பம்பாய்-98**

### புதுமைப்பெண்

வழக்கமான அம்சங்கள் தான். மகேந்திரனின் அறுவை எடுபடவில்லை. அறியாப் பெண் வாந்தியெடுக்கும் காட்சி மாமூலான அபத்தம். ஆனால், பாரதியின் தோற்றமும் கருத்தும் திரும்பத் திரும்பக் கதாநாயகியின் உணர்வுகளை விழிப்படையச் செய்ய அவள் கணவனை எதிர்ப்பது அருமை.

**இரா. பழம், மயிலாடுதுறை**

### 'அர்த் சத்யா'

போலீஸ் இலாகாவுக்குள் அரசியல் புகுந்து எப்படி ஆட்டி வைக்கிறது என்பதைத் தத்ரூபமாகக் காட்டுகிறது 'அர்த் சத்யா.' ஓம் பூரியின் நடிப்பில் ஒரு நேர்மையான அதிகாரியின் மனக்கொந்தளிப்பைக் காண்கிறோம். ராமா ஷெட்டியாக நடித்துள்ளவரும் மிக இயற்கையாகச் செய்துள்ளார். கோவிந்த் நிஹலானியின் இயக்கத்தால் அற்புதமாக அமைந்துள்ள படம்.

**எம். ஜயலக்ஷ்மி, சென்னை-83**

### ஒண்ணும் தெரியாத பாப்பா

புதிதாகப் படம் எடுக்க முயற்சி செய்பவர்களுக்கு இப்படம் ஒரு களஞ்சியம்—எப்படியெல்லாம் படம் எடுக்கக் கூடாது என்று தெரிந்து கொள்ள.

**ப. முத்துராஜன், இராஜபாளையம்**





### சகலகலாவல்லவன்

படம் முழுவதும் அடிக்கு அடி அடிதடி. எத்தனை அடி, உதை வாங்கினாலும் கதாநாயகனின் குடுமியும் சரி, வேட்டியும் சரி ஒரு முறை கூட அவிழ்வதில்லை. ஆகையால் இப்படத்துக்கு 'வெண்கல அடி அடித்தும் வேட்டி அவிழாத கம(ல்)லி' என்ற பெயரே பொருந்தும்.

பி. கு:– கம(ல்)லி– தென்னிந்திய ப்ரூஸ் லீ.

**என். கே. கல்யாணி, பம்பாய்-89**

### நீங்கள் கேட்டவை

பழைய மசாலா கதைக்கு பாலிஷ் போட்டுவிட்டுக் குறைகளை ஒளிப்பதிவால் ஈடுகட்ட முயன்றிருக்கிறார் பாலு மகேந்திரா.

அழியாத கோலங்கள் மற்றும் மூன்றாம்பிறை இயக்குனரிடம் நாங்கள் கேட்டவை நிச்சயமாக இது இல்லை.

**கிரிஜா, திருச்சி-21**

**கல்யாணப் பரிசு**

அழகும், எளிமையும் நல்ல கதையும் உடைய படம். ஆனால் தூய தமிழ்ப் பேச்சை இரசிக்க முடியவில்லை. இருப்பினும் அந்தப் பாடல்களும், நகைச்சுவையும்..... ஆஹா கேட்கக் கேட்கத் திகட்டாதவை.

**ஏ. விஜி, புதுதில்லி-60**

**காதுல பூ**

எமன், பாவம் செய்பவர்களை எண்ணெய்க் கொப்பரையில் போட்டுத் தான் தண்டிக்க வேண்டும் என்பதில்லை. இந்தப் படத்தைப் பார்க்கச் செய்தாலே போதும்.



பின்னணி இசையையும் மீறிப் பார்வையாளர்கள் 'நறநற' வென்று பற்களைக் கடிக்கும் சப்தம் அரங்கில் கேட்கிறது.

**ஜி. ஜோதிமணி, கோவை-1**

**மந்திரி குமாரி**

கலைஞர் எழுதி எம். ஜி. ஆர். நடித்த பழைய...ய்ய படம். வசனங்கள் நெருப்புத் துண்டங்கள். எம். ஜி. ஆரின் வாள் வீச்சும் நம்பியாரின் கண் வீச்சும் மிகக் கூர்மை. ஏமாற்ற நினைக்கும் கணவனை மலையுச்சியிலிருந்து உருட்டி விடும் மாதுரி தேவி இன்றைய புதுமை, புரட்சிப் பெண்களுக்கெல்லாம் முன்னோடி.

**குமரி அமுதன், நாகர்கோவில்**

**தேவரின் தெய்வம்**

மிகக் குறைந்த செலவில் அறுபடை வீடுகளைத் தரிசிக்க முடிகிறது. அங்கு நடக்கும்





உற்சவங்களைக் கண்டு மகிழ முடிகிறது. எத்தனை வருடங்கள் ஆனாலும், கண்ணுக்கும், மனத்துக்கும் இனிமைதான்.

**எஸ். எஸ். ஹரிஹரன், கோவை-9**

**தி காட்ஸ் மஸ்ட் பி க்ரேஸி**

உலகமறியாத காட்டு வாசியின் வெகுளித்தனமும், நகைச்சுவை உணர்வும் மீண்டும் மீண்டும் படத்தைப் பார்க்கத் தூண்டும். டப்பா கார் செய்யும் கூத்து வயிற்று வலி வரும் அளவுக்குச் சிரிக்க வைக்கிறது. தரமான நகைச்சுவை சிந்தனையைத் தூண்ட வேண்டும். இதில் இப்படத்துக்கு அமோகமான வெற்றி.

**வீ. முத்தையா, திருநெல்வேலி-6**



**அன்புள்ள ரஜினிகாந்த்**

காதல், மோதல், சில்க், அனுராதா, மசாலா... இவை இல்லாமல் நிறைவாகப் படம் எடுக்க முடியும் என்று நிரூபித்திருக்கிறார்கள். சபாஷ்!

அன்புள்ள மீனுக்குட்டி, டிங்கு மற்றும் நெஞ்சை அள்ளிய மழலைச் செல்வங்களுக்கு அன்பு முத்தங்கள்.

**ஆர். ராஜலட்சுமி, கரூர்.**

**ஸ்பர்ஷ் (ஹிந்தி)**

பார்வையற்றோர் பள்ளியில் தலைமை ஆசிரியர் நாஸிருத்தீன் ஷாவுக்கும் ஷபானா ஆஸ்மிக்கும் இடையே காதல் தோன்றுவதைக் காட்டும் விதம் கவிதை. ஷபானா நடிக்காமல் பாத்திரமாக மாறிவிட்டார். ஷா பார்வை உள்ளவர் என்பதே மறந்து விடுகிறது.

**கே. கணேஷ், பெங்களூர்-2**

**அன்பே ஓடி வா**

1984-இன் சிறந்த 'காமெடி' படம் என்றால் அன்பே ஓடி வாதான்! இதில் மோகன் ஓடுவது போல் நம்மவர் ஒலிம்பிக்ஸில் ஓடியிருந்தால் நிச்சயம் தங்கப் பதக்கம் கிடைத்திருக்கும். படத்தில் எல்லோரும் ஓடுகிறார்கள், ஆனால் படம் -'கொர் கொர்'- தூங்குகிறது.

**கே. வி. நளினி, சிவகாசி**

**அச்சமில்லை அச்சமில்லை**

சம்மட்டியால் தாக்குகின்ற வகையில் புரட்சிகரமாக அமைந்திருக்கிறது. 'தேன்மொழிகள்' இல்லம் தோறும் தோன்றிப் புதிய பாரதம் படைக்க வேண்டும்.

**ப. மூர்த்தி, பங்களூர்-21.**

**பாசமலர்**

பதினோராவது தடவையாகப் பார்த்த போது கூட கண்ணில் நீர் மல்கச் செய்தது. அண்ணன் – தங்கை அன்பை இதைவிட சிறப்பாகக் காட்டவே முடியாது.

**அ. சுப்புலக்ஷ்மி, திருநெல்வேலி-1**

**நிரபராதி**

படத்தின் பெயர்தான் நிரபராதி. அலங்கோலமான கற்பழிப்புக் காட்சி அமைந்துள்ள இதைப்பார்த்ததும்பார்த்ததற்காகவே குற்ற உணர்வு மேலிட்டது.

**சரஸ்வதி, லாஸ்பேட் அஞ்சல், புதுவை**

**மாமன் மச்சான்**

கையில் பணமிருப்பதால் என்ன மாதிரி வேணாலும் படம் எடுக்கறதா சார்? இந்த மாதிரிப் படங்கள் வந்தா நம்ம திரை உலகம் நிச்சயமா உருப்படாது.

**ராஜசாரதி, குளித்தலை**

**எழுதாத சட்டங்கள்**

துளியும் புதுமையோ புரட்சியோ இல்லை. கொட்டாவி விட்டுக் கொண்டே பேசக் கூடிய வசனங்கள். நட்சத்திரக் குவியலையும், செட்டுகளையும் நம்பிப் படம் எடுத்த காலம் மலையேறிப் போச்சு... இந்தத் தலைமுறை கேட்பது – இயற்கையான கதையமைப்பு, இயல்பான வசனம், காமராக் கோணத்தில் புதுமை, புரட்சி. என்ன தயாரிப்பாளரே! புரிந்ததா?

**ஆயிஷா ரஜித், தஞ்சாவூர்-7**

**இங்கேயும் ஒரு கங்கை**

'இங்கேயும் ஓர் அறுவை' என்ற பெயர் தான் பொருத்தமாக இருந்திருக்கும். சினிமா டிக்கட் தவிர மூன்று ஆஸ்பிரோ, நாலு கப் காப்பிக்கு ஐந்து ரூபாய் அழுதேன்.

**ஆர். ஜகதீசன், கோவை-4**

**24 மணி நேரம்**

மூன்று மணி நேரத்தில் 24 கொலைகள். இதே போல் பல படங்கள் வந்தால் பாரதம் நிச்சயமாக முன்னேறிவிடும்!

**ஆர்.ராதாச் சந்திரன், மேட்டூர் அணை**

**சாந்தி முகூர்த்தம்**

ஒரு பெண் டைரக்டரே கதாநாயகியின் தாராளமான ஆடைக் குறைப்பை அனுமதித்துள்ளது மிகுந்த வருத்தம் அளிக்கிறது. ஊர்வசியின் நடிப்பு – பரவாயில்லை.

**வை. வெங்கடேசன், சென்னை-14**

---

ராகமாலிகா வழங்கும் பட்டுப்புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:

**வை. வெங்கடேசன்**
33, டிஸில்வா ரோட்,
மைலாப்பூர்,
சென்னை—600 004.

---

''ஏங்க கவலையா இருக்கீங்க...?''
''நடக்கக் கூடாதது நடந்து போச்சு.''
''அட அப்படி என்னதான் நடந்தது?''
''நான் பணம் கட்டிய குதிரை!''
—ஜெயின் சேகர்.







# போர்ன்விடாவின் இனிமைக் காலம்

போர்ன்விடா அளித்தவரை பாச மனங்கள்
நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்!

1 கிலோ பேக்கிலும்
கிடைக்கிறது.
அதன் உள்ளே ஒரு
இலவசக்
குவளை.

வளரும் குழந்தைகள் வேறு எந்த மால்ட்டட் பானங்களையும்விட போர்ன்விடாவை விரும்புவதேன்? போர்ன்விடா அருந்தி வளர்ந்த இரு தலைமுறையினர் தங்களுடைய குழந்தைகளுக்கு போர்ன்விடா தவிர வேறு எதுவும் உகந்ததல்ல என்று வலியுறுத்திக் கூறுவதேன்?

அதில்... உற்சாகம் துள்ளும் சுவை மட்டுமல்ல, காட்பரீஸின் பிரபல பெயர் மட்டுமல்ல, அவற்றைவிட அதிகமோ அதிகம். அதுதான் போர்ன்விடா! அதோடு வளருங்கள்.

காட்பரீஸ்
**போர்ன்விடா**
நல்ல வளர்ச்சி,
போர்ன்விடா பயிற்சி.









OBM/3783 TAM

## போட்டிக்கதை 6



# இன்றிரவு 12 மணிக்குள்ளே.

**'சுபமூகா'**

"இன்னைக்கு ராத்திரி பன்னிரண்டு மணிக்குள்ளே உங்களுக்குப் பெரும் விபத்து ஒன்னு நிகழப் போகுது."

தடக்கென்று படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்தேன். இதயம் நின்று விடுவதைப் போல வேக வேகமாக அடித்துக் கொண்டது. தலையில் இருந்து வியர்வை வெள்ளம் உடலில் இதர பாகங்களுக்குப் பாசனம் ஆகிக் கொண்டிருந்தது.

"ஏங்க ஏன் அப்படி திடுதிப்னு எழுந்து உட்கார்ந்தீங்க? ஏதும் கெட்ட கனவா?"— கீதா அன்பாக என் தோளைத் தொட்டு வினவினாள். இன்னும் சில மணி நேரங்கள் தான் — இந்த அன்பு, பாசம், காதல் எல்லாம்; அப்புறம் — ஒரே இருட்டு. தூரத்து ஒளி விளக்கைத் தேடிப் பறக்கும் பறவை நான்...

மனத்தில் எண்ணங்கள் பற்றிக் கொண்டு எரிந்தன.

கற்பனையைத் தற்காலிகமாக ஒத்தி வைக்கப் போர்வையை இறுகத் தலையில் போர்த்திப் படுக்கையில் சாய்ந்தேன். தலையில் 'ஙொய்' சென்றது கட்டில். சே தள்ளிப் படுத்தேன்.

கீதா என்னையே கரிசனத்தோடு பார்த்துக் கொண்டிருப்பது தெரிகிறது. அவள் நெற்றியில் இரவிலும் அழிந்து போகாமல் அழகாக விளங்கும் குங்குமம் — அதைக் காண்கிறேன்.

'அந்தக் குங்குமம் ஒருவேளை இன்று ராத்திரி 12 மணிக்குள்...'

தாள முடியாமல் மீண்டும் எழுந்து உட்கார்ந்தேன்.

எல்லாம் அந்த ஜோசியரால் வந்த வினை—

ராம் மோகனை மனமாரத் திட்டினேன். அவன் தான் என் ஆசையைக் கிளப்பிவிட்டு மோசம் போக வைத்து விட்டான். அமைதியாக இருந்த தடாகத்தில் பாறாங்கல்லையே போட்டு விட்டான்.

"டேய், இவர் சொல்றது சொல்றபடி அப்படியே நடக்குதாண்டா. என் கம்பெனியில் நாலு பேர் அவர்கிட்டே ஜோசியம் கேட்டிருக்காங்க. அவர் சொன்னதெல்லாம் கரெக்டா நடக்கிறதா நாலு பேரும் சத்தியம் பண்றாங்கடா... நான் இன்னைக்கு அங்கே போறதா இருக்கேன்... வர்றியா?"

எனக்கும் ஜோசியத்துக்கும் ரொம்ப தூரம். நான் மறுத்தேன்.

"போடா — நீ வராட்டிப் போ, பாக்யராஜ் கூட இவர்கிட்டே கையை நீட்டியிருக்காராம். கார் வேறே வைச்சிருக்காராம். நீ வராட்டி என்ன, நான் போறேன்... காபி சாப்பிட்டுவிட்டுப் போடா..."

காபி சாப்பிட்டவாறே அந்த ஜோசியரின் புகழைச் சொல்லிச் சொல்லி மாய்ந்தான்.

"என்னடா கடைசியிலே நீயும் இளம் பிட்டே... சரியான கஞ்சப் பயடா நீ... செலவு ஆகும்னு தானே வரமாட்டேங்கிறே?"

"சே சே எனக்கு இதிலெல்லாம் நம்பிக்கையே இல்லே. அவன் என்ன தான் சொல்றான் பார்ப்போமேன்னு தான்..."

ஜோடாகப் பேச்சை ஆரம்பித்தார் அந்த ஜோசியர். கவரும் விதத்தில் பேசுவதில் தான் இந்த ஜோசியர்களின் கைங்கர்யமே இருக்கிறது. இவர் நன்றாக ஜோசியம் சொல்வார் என்கிற நம்பிக்கை மனத்தில் விழுந்தது.

"இப்ப உங்க ரெண்டு பேர்ல யாருக்கு முதலில் பார்க்கணும்?" என்றவாறு லென்ஸைக் கையில் எடுத்துக் கொண்டார். நான் ராம்மோகன் பக்கம் திரும்பி அவனைப் பார்க்க...

"நீ முதலிலே பாரு.. அப்புறம் நான்.." என்று என் காதில் முணகினான். என் கையை அவருக்குக் கடன் கொடுத்தேன். ஜோசியர் ராம் மோகனைப் பார்த்துப் புன்னகைத்தார்—

"அப்ப நீங்க கொஞ்சம் வெளியே இருங்க. ஒருத்தருக்குச் சொல்லப்படற ஜோசியத்தை இன்னொருத்தர் கேட்க முயற்சி செய்யக் கூடாது." — ராம்மோகன் என்னை நிராதரவாக்கி வெளியேறினான்.

"ஜோசியத்துக்குன்னு இருக்கக் கூடிய அந்தத் தேவி அருள் பார்வை விழும்போது அதை மத்தவங்க தப்பித் தவறியும் பார்க்கக் கூடாது. நான் சொல்ற ஜோசியத்தை நீங்களும் வெளியே சொல்லக் கூடாது. விளைவுகள் கொடுமையாக இருக்கும்." என்று பயமுறுத்தினார்.

"இப்படித்தான் அந்த நபுகை... என்கிட்டே கேட்ட ஜோசியத்தை எல்லார்கிட்டயும் சொல்லப் போக, இப்பப் போன இடமே தெரியலை..."

கையை மேய்ந்தார்.

"அட... அட... என்ன தன ரேகை! சிலருக்குக் கூட இது மாதிரி தனரேகை

பார்க்கலே... நல்லா அருமையான செல்வ பாக்கியம் — இப்ப இல்லாட்டிக் கூட எதிர் காலத்தில்...''

''மகாலட்சுமியே உங்களுக்கு மனைவியா கிடைச்சிருக்கணுமே — கொள்ளை அழகு... நீங்க கொடுத்து வைச்சவர்... ஆனா ஒரே ஒரு குறை. உங்களுக்கு குழந்தை பாக்கியம் இல்லே... உங்க மாமனார் வீட்டிலிருந்து ஒரு செல்வமும் வந்திருக்காது. பொண்ணு மட்டும் தான் வந்திருக்கணும். இன்னும் சொல்லப் போனா, வரதட்சிணை கூட நீங்க வாங்கலே...''

'ஐயோ, ஐயோ இந்தக் கைக்கு இப்படியே முத்தம் கொடுத்து விடலாமா? அப்படியே பிட்டுப் பிட்டு வைக்கிறாரே? உண்மை தான், எனக்கு வாய்ச்ச மாமனார் ஒரு முதலிரவுக் கட்டிலைக் காட்டியே ஏமாத்தி என் தலையில் மிளகாய் அரைச்சவர். சீரும் இல்லே... செனத்தியும் இல்லே.

''ஆயுள் ரேகை'' — என்று சொல்லி வெள்ளை நகர்த்தினார்.

''உங்க பிறந்த தேதி என்ன சார்!''

''உண்மையா 24.9.1951. ஆபீஸ் ரெகார்ட்ஸ்லே 24.7.1951.''

ஒரு பேப்பரில் எழுதிக் கொண்டார்.

''செப்டம்பர் 24 இல்லையா...?'' அவர் குரலில் உற்சாகம் கொஞ்சம் குறையக் கேட்டார்.

அறைக்குள் அங்கும் இங்கும் மெல்ல நடமாடினார். அடிக்கடி என் முகத்தை வெவ்வேறு பாகத்திலிருந்து. கோணத்திலிருந்து பார்த்தார். என்னை வைத்துப் படமெடுக்கும் டைரக்டர் கூட அப்படி பார்த்திருக்க மாட்டார் — அது மாதிரி.

கையைக் காற்றில் அசைத்துக் கணக்குப் போட்டார்.

நான் நெற்றியைச் சுருக்க...

''மனசைத் திடப்படுத்திக்குங்க...'' என்றார்.

''எந்த விஷயத்தையும் துல்லியமா நான் குறிச்சுச் சொல்றவன் நான். கெடுதலா இருந்தாலும், அது எப்ப எந்த தேதியில் நடக்கும் அப்படீன்னு எனக்குக் கணிக்க முடியும். அப்படிக் கணிச்சதிலே... நாளைக்கு — ஆமா நாளைக்கு உங்களுக்குப் பெரிய கண்டம் ஒண்ணு இருக்கு...'' நிறுத்தியவர் தொடர்ந்தார்:

''நாளைக்கு ராத்திரிக்குள்ளே... அதாவது 12 மணிக்குள்ளே ஒரு பெரும் விபத்து உங்களுக்கு நிகழப் போகுது.. இதனாலே உங்க உயிர் போயிடும்னு சொல்ல முடியாது. ஆனாலும், இருக்குமாங்கறதும் சந்தேகம் தான். எல்லாம் அந்தத் தேவியின் அருள்...''

அவர் சொல்லச் சொல்லக் கனமான இறுக்கம் ஒன்று என்னைச் சூழ்ந்தது.



ஐம்பது ரூபாயை எடுத்து நீட்டிவிட்டு மீதிக்காக நின்றேன். அவர் ஐம்பது ரூபாயை இரண்டு முறை நோட்டம் விட்டு 'இவ்வளவுதானா?' என்கிற மாதிரி பார்வையை என் மேல் பதிக்க... நான் நடந்தேன். கால் ரொம்ப கனத்தது.

''எப்படிடா?'' என்றான் ராம்மோகன் ரகசியமாக.

''ம்... இந்த இருபதாம் நூற்றாண்டிலே போய் ஜோசியத்தை எல்லாம் நம்பலாமா? எல்லாம் பொய்... ஏமாத்தற பசங்க. எனக்குச் சொன்னதெல்லாம் நடக்குங்கறியா? நடக்காதுடா.''

''உனக்கு என்னடா சொன்னான்?''

''அதெல்லாம் எதுக்கு? வேஸ்ட் ஆஃப் டைம்.''

ஆனால் என் மனத்தில் உள்ளுக்குள் ஒரு பயப் பாம்பு குடலோடு குடலாகச் சுற்றிச் சுற்றி...

''இன்னிக்கு ராத்திரி 12 மணிக்குள்ளே... ஜோசியர் வைத்த கெடு என்னை அறியாமல் என் மனத்தை முழுமையாக ஆட்கொண்டது.

ஈஸிசேரில் சாய்ந்தபடி உத்திரத்தைப் பார்த்துக் கொண்டு இருந்தேன். ஆபீஸ் போகவில்லை. சீதா சந்தேகம் கேட்டதும்,

''இன்னைக்கு ராத்திரி 12 மணிக்குள்ளே பெரும் விபத்து''... என்றேன்.

'பெரும் விபத்து நிகழப் போகுதுன்னு தானே சொன்னார். நான் வீட்டிலேயே இருந்துட்டா...?'

பெருமிதத்துடன் மூளைக்கு நன்றி சொல்லி ஈஸி சேரில் சாய்ந்தேன். மனத்தில் சொல்ல முடியாத குதூகலம்.

'உனக்கும் பெப்பே... உன் ஜோசியத்துக்கும் பெப்பே...'

திடீரென்று மேலேயிருந்து தூசுகள் விழுந்து விட, மேலே பார்த்த போது திடுக்கிட்டுப் போனேன். ஒரு அணில் உத்திரத்தில் இருந்து சுவருக்குத் தாவ, உத்திரம் ஆடி அதிர்ந்தது.

யாரால் வேகமாகப் பேச முடியும்? ஆணாலா? பெண்ணாலா? இதைக்கண்டு பிடிக்க மேற்கு பெர்லினில் ஒருபோட்டியை நடத்தியுள்ளார்கள். வெற்றி பெற்றது ஒரு ஆண்மகனே! அவரது பெயர் ஸ்பீடர் ஸ்பீக்கர். இவர் நிமிடத்திற்கு 908 வார்த்தைகள் பேசி வெற்றி பெற்றாராம்.
''பார்த்தும் கேட்டும் அறியாத'' என்னும் நூலிலிருந்து — தகவல்: ஜா. ரவி.



''உத்திரம் விழுந்து வாலிபர் மரணம்'' என்கிற செய்தி என் கண்ணில் ஓட எழுந்து நடந்தேன். ஒரு ஐடியா! என் ஸ்கூட்டர் ஹெல்மெட் — அதைப் போட்டுக் கொண்டேன். அதே உத்திரத்தின் அடியில் வந்தமர்ந்தேன்...

''இதென்ன அண்ணா கோலம்...? பனியன், வேட்டி, ஹெல்மெட் — நல்ல காம்பினேஷன்...'' என்று சொல்லியபடி வந்தான் ஸ்ரீராம்.

''உங்க அண்ணாவுக்கு எப்பவுமே விளையாட்டுதான்...'' என் மனைவியும் அவன் களிப்பில் சேர்ந்து கொண்டாள்.

''அண்ணா இன்னைக்கு லீவா? உங்க ஸ்கூட்டர் நான் எடுத்துப் போறேனே ...''

பதிலுக்குக் காத்திராமல், என் ஸ்கூட்டர் சாவியை எடுத்துக் கொண்டு, என் தலையிலிருந்த ஹெல்மட்டையும் பறித்துக் கொண்டு நழுவினான்.

திரும்பவும் இறுக்கம் என்னைத் தழுவியது.

வெளியே நடந்து வரலாம் என்று போனால்...

'இன்னைக்கு ராத்திரி 12 மணிக்குள்ளே.'

குரல் ஒன்று என்னைப் பயமுறுத்தியது. எந்த ஒரு வாகனத்தைப் பார்த்தாலும் அது என்னைக் குறி வைத்து வருகிற மாதிரி ஒரு கற்பனை!

மனசைத் திட்டித் தீர்த்தேன். 'இன்று வெளியில் வந்தது பெரும் தவறு கடவுளே, காப்பாற்று' என்று தனித்தனியே ஒவ்வொரு கடவுளுக்கும் வேண்டிக்கொண்டேன். முடிந்தவரை நெடுஞ்சாலைகளைத் தவிர்த்தேன். நிறைய வாகனங்கள் வரும். எசகு பிசகாக ஏதும் ஆகிவிடலாம்.

எதிரே இரு கல்லூரி மாணவிகள் — பனியன், ஜீன்ஸில் அழகைக் கொட்டிக் குலுங்கி நடந்தார்கள். மனைவிக்குத் தெரியாமல் வெளியே ரசிக்கும் இந்தத் திருட்டுத் தனத்திற்கு இன்று கடைசி நாளாக இருக்கலாம். யார் கண்டது?

திரும்பி அந்தப் பெண்களைப் பரிதாபமாகப் பார்த்தேன்.

அடுத்து, புதிதாக மணமான ஜோடி ஒன்று என்னைத் தாண்டிச் சென்றது. கலகல சிரிப்பு. விளம்பர ஜோடி போல. நானும் சீதாவும் மணமான புதிதில் இப்படித்தான் இருந்தோம். அப்புறம் பழகப் பழகப் பாலும் புளித்த கதைதான். நான் அவளைத் திட்ட, அவள் கோபித்துக் கொள்ள, நான் சமாதானம் என்ற பேரில் இரவில் சரணடைய... சே! சில சமயங்களில் வாழ்க்கை எனக்கு வெறுத்துப் போயிருக்கிறது.

ஆனாலும், எல்லாவற்றிற்கும் அவள்மேல் தப்பு சொல்ல முடியாது. நானும் கொஞ்சம் அனுசரித்துப் போகாதது என் தவறுதானே? எத்தனை முறை அவளுடைய சமையலைக் கரித்துக் கொட்டியிருக்கிறேன்?

எல்லாம் சாகப் போகும் காலத்தில் தோன்றுகிறது. சே இருக்கும் நாளோ ஒரு நாள் — இன்னும் சில மணி நேரங்கள் என்றாகி விட்டது. அவளை விட்டுவிட்டு நான் மட்டும் வந்தது எத்தனை பெரிய

தவறு? இன்று முழுக்க அவனோடு கொஞ்சிக் குலாவ வேண்டும். ஏதோ கமலஹாசன் படம் பார்க்க வேண்டும் என்று ஒரு மாத மாகச் சொல்லிக் கொண்டிருக்கிறாள். அழைத் துப் போக வேண்டும்...

பக்கத்தில் இருந்த தியேட்டரில் அதே கமலஹாசன் படத்துக்காக, மாட்னி ஷோ வுக்கு அட்வான்ஸ் புக்கிங் இரண்டு டிக்கெட் வாங்கிக் கொண்டேன். மனத்தில் குதூகலம். இன்று நல்லதொரு அனுபவம்—

இந்த மகிழ்ச்சியைக் சீதாவுடன் அனு பவிக்க வேண்டும்.

பூ வாங்கினேன். இதை என் கையா லேயே அவளுக்கு சூட்டிவிட்டு, அப்படியே அவளை வாகவமாக என் பக்கம் திருப்பி...

என்னென்னவோ மன்மதக் கற்பனைகள்— என்னவோ ஒரு புது மாப்பிள்ளை போல் என் மனத்தில் கொண்டாட்டம்.

சாலையைக் கடக்க ஆரம்பித்தேன்—

சாலையின் கடைசிக்கும் வந்து விட்ட. அந்த நொடியில் —

வேகமாக வந்த கார் ஒன்று என் மீது மோத, நான் தூக்கி எறியப் ப...டு...கி...ன். றே.....ன்...

'இன்னைக்கு ராத்திரி 12 மணிக்குள்ளே உங்களுக்குப் பெரும் விபத்து ஒண்ணு நிகழப் போகுது...'

''ஏங்க... கண்ணைத் திறந்து பாருங்க ''

''அவரை டிஸ்டர்ப் பண்ணாதீங்கம்மா. கொஞ்சம் மயக்கம் அவ்வளவு தான். பயப்படறதுக்கு ஒண்ணும் இல்லே...''

டாக்டர் சொல்லிக் கொண்டிருக்க...

நான் கண் விழிக்கிறேன்... எங்கே இருக் கிறேன்...?

கொஞ்ச நேரம் ஒன்றும் புரியவில்லே. என் உடல் முழுதும் கட்டுப் போட்டிருந் தார்கள். தலையில் விண் விண்.

''நல்லவேளை என் வயித்திலே பால் வார்த்திங்க... மூகாம்பிகா நீதான் என் புருஷனைக் காப்பாத்தினே... அடுத்தமாசம் கொல்லூர் வரேன் தாயே...'' என்று கண்ணீர் மல்க சொல்லிக் கொண்டிருந்தாள் சீதா.

''ஒண்ணும் பயப்படாதீங்க. இன்னும் ஒரு வாரம் ஓய்வு இருந்தால் எல்லாம் சரியாப் போயிடும்... அப்படி என்ன மிஸ்டர் கணேஷ் உங்களுக்கு யோசனே? சாலையைக் கடக்கும் போது ஜாக்கிரதையாகக் கடக் கணும் இல்லையா?''

என்று டாக்டர் சொல்லிக் கொண்டிருக்க, என் பார்வை சுழன்றது. என்னைச்சுற்றி....

அப்பப்பா எத்தனை பேர்!

என் தம்பி ஸ்ரீராம், தங்கை துர்க்கா, சீதா, அப்பா, அம்மா, சித்தப்பா, சித்தி, பக்கத்து வீட்டு குரு, ராம்மோகன் —அப் புறம் ஜோசியர்... அட இவர் எதற்கு இங்கு வந்தார்?

ராம்மோகனைப் பார்த்து, ''இவர் எங்கே இப்படி?'' என்று நான் கஷ்டப்பட்டுக் கேட்க,

''இவர் கார் தான் உன் மேல் மோதியது '' என்றான் ராம்மோகன் அமைதியாக.

## முதல் குழந்தை



**போட்டி: 23**

முதல் குழந்தை எந்தக் குழந்தை வேண்டும் என்று எதிர்பார்த்தீர்கள் அல்லது எதிர்பார்க்கிறீர்கள்? ஏன்? ஒரே எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும். பிரசுரமானால் பரிசு. தவிர குலுக்கல் முறையில் ஒருவ ருக்குப் பட்டுப் புடவை. உறையின் மீது ''முதல் குழந்தை'' என்று குறிப்பிடவும்.

முடிவு தேதி: **22-10-84**

இன்னும் 30 பட்டுப்புடவைகள் பாக்கி யுள்ளன. அவற்றுள் ஒன்றைப் பெற முயல வும். வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறவும்.

என் பெயர் : ..........................

விலாசம் : ..........................

..........................

**பரிசுத்திட்டம்**

**பட்டுப்புடவை**

உள்ள மதிப்புக்கு மேல் ஒற்றை ரூபாய் கூட
தந்துவிட மாட்டாள் லலிதா...



# அதனால் தான் அவள் ஸர்ஃப் வாங்குகிறாள்.

''ஆமா. ஸர்ஃப் தான் எனக்கு. அதுக்குக் கொடுக்கற பணம் முழுக்க முழுக்க மதிப்பு. அதுக்குக் குறைஞ்சு போவானேன் நான்—அதுவும் இந்த நாளிலே போய்.''

**இருந்தாலும், மலிவு வாஷிங் பவுடர் வாங்கினீங்கன்னா பணமிச்சம் இருக்கத்தானே இருக்கும்?**

''கேலிக்கூத்து! மலிஞ்ச சரக்கு வாங்கறதுக்கும் மதிப்புள்ள பண்டம் வாங்கறதுக்கும் ஏகப்பட்ட வித்தியாசம் உண்டே.''

**ஒத்துக்கறேன். மலிவுப் பவுடர்களைவிட அதிகமா அப்படி என்ன மதிப்பு இருக்கு ஸர்ஃப்லே?**

''அப்படிக் கேளுங்க. மலிவுப் பவுடரோட 1 முழுக் கிலோ பைக்குள்ளே இருக்கற அதே அளவுப் பவுடர் ஸர்ஃப் ½ கிலோ பேக்கிலே இருக்கு.''

**ரெண்டு மடங்கா? அதென்னமா?**

''அதுதானுங்க ஸர்ஃப்! ஸர்ஃப் ½ கிலோ பேக்குலே உள்ள பவுடரை எடுத்து, மலிவுப் பவுடரோட காலியான 1 கிலோ பைக்குள் அப்படியே கொட்டினா கணக்கா பை ரொம்பிடும்.''

**அப்படியேதான் இருந்தாலும்...**

''இருங்க. எடை பார்க்கப்போனா, ஸர்ஃப் மதிப்பு ரொம்ப ரொம்ப அதிகம்தான். ஸர்ஃப் மாதிரி வெளுப்பை எந்த மலிவுப் பவுடரும் தந்துட முடியாது. கலர்த் துணிகளோட பளபளப்பை ஸர்ஃப் மாதிரி எதுவுமே காப்பாத்தாது. என்னமா வெளுக்குது ஸர்ஃப், எங்க வீட்டுத் துணிகள் ஒண்ணொண்ணையும் புதிசுபோல சோபிக்க வைக்குது சலவைக்கு சலவை.''

**நியாயம் இருக்கு நீங்க சொல்றதுலே...**

''சொல்ல இன்னும் எவ்வளவோ இருக்கு. கரோமான மலிவு பவுடருங்க சருமத்துக்கே கேடு. ஸர்ஃப் அப்படி இல்லை, அலசற என் கைகளைத் துளிக்கூட பாதிக்காத சுகமான பவுடர். அனுபவத்துலே சொல்றேன்.''

**புரியுது, நல்ல மதிப்புன்னு நீங்க எதைக் கண்டு வாங்கறீங்கன்னு தெரியுது...**

''ஆமா! சொல்ப ரூபாய்களை மிச்சம் புடிக்கறதுக்காக மாசாமாசம் இவ்வளவு அனுகூலங்களையும் கோட்டைவிட நான் தயாராயில்லை. கஞ்சத்தனமா சில்லறை சேர்க்கறதுக்கும் செழிப்பா குடித்தனம் நடத்தறதுக்கும் வித்தியாசம் என்ன, கொஞ்சநஞ்சமா!''




## எடைபோட்டு மதிப்பிட்டால் புரியும்: ஸர்ஃப் வாங்குவதே புத்திசாலித்தனம்.

LINTAS SU 320 20 25 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# வேங்கை வனம்

கோவி. மணிசேகரன்

## அத்தியாயம் 24

## "நீ ஒரு பெண்தானா?"

போர் மேகங்கள் பரவலாகச் சூழ்ந்து விட்டன.

மேலும் பொய்ப் பசிக்கும் மெய்ப் பசிக்கும் உரிய ஐப்பசித் திங்களது.

இயல்பான மேகங்கள் வானில் சூழ்ந்து எந்த நேரத்திலும் இடி முழக்கம் செய்ய லாம்.

கானப்பேர்க் கோட்டையை மேம்போக் காகப் பார்வையிட்ட யவனர்கள், அதனை எவ்வாறு வீழ்த்துவது என்பது குறித்து மதுரையில் தீவிர ஆலோசனை செய்ததன் காரணமாகச் சில புதிய உத்திகளைப் பின் பற்ற ஆவன செய்து வருகிறார்கள்.

அதற்காக எவ்வளவு பொருள் செல வானாலும் பரவாயில்லை என்று உக்கிரப் பெருவழுதிப் பாண்டிய மாமன்னர், மகா சேனாபதி காவிதி அழகன் நம்பியிடம் ஒப்படைத்திருந்தார்.

அத்துடன் நில்லாது—

சமயத்தில் கடல் போன்ற தமது சேனைகளுக்கு, வேங்கைக் கோட்டைப் பொறிகள் ஆபத்து விளைவித்து விடுமே யானால் மேலும் வீரர்கள் தேவைப்படலாம் அல்லவா? முற்றுகை எத்தனை நாட்கள் நீடிக்குமோ?

கோட்டையுள் பிரவேசித்து விட்ட பிறகு பின் வாங்குகிற நிலைமை ஏற்பட்டு விடக் கூடாது என்பதற்காகச் சோழப் பேரரசுக் கும் சேரப் பேரரசுக்கும் தூது அனுப்பி இருந்தார்!

சரித்திரத்தில் இது ஒரு பயங்கர மடல் யலா? 'தோல்வி' என்ற சொல் ஏறிவிடுமே யானால்...

கோட்டையைத் தகர்க்க யானை பலம் தேவை. சேரமான் மாரிவெண்கோவுக்கு ஆயிரம் யானைகள் தேவையென்று ஓலை போக்கி இருந்தார்.

உணவுத் தட்டுப்பாடு ஏற்படாதவாறு கவ னிக்கச் சோறு வளம் படைத்த சோழப் பேரரசர் பெருநற்கிள்ளிக்கு வேண்டுதல் விடுத்திருந்தார்.

மற்றபடி பாண்டியப் பேரரசுக்குக் கீழ்ப் படிந்த குறுநிலப் படைகள் வந்து குவிந்த வண்ணமிருந்தன.

ஒரு சாதாரண சிற்றரசன் வேங்கை மார்பனை வீழ்த்த இத்தனை முனைப்பாடுகளா?

பலரும் எண்ணி வியந்தனர்.

வேங்கைமார்பன் எத்தகு வீரனாக இருக்க வேண்டும்? அவனது கோட்டை எத்தகு வலிமை வாய்ந்ததாக இருக்க வேண்டும்?

இதேநிலை, கானப்பேரெயிலிலும், போரா ரவாரங்கள் கறுகறுவென்று நடைபெற்றுக் கொண்டிருந்தன.

வேங்கைமார்பன், தனது நண்பன் தகடூர் அதியமான் மகன் பொருட்டெழி னிக்குத் தூது அனுப்பி இருந்தான்.

பாண்டிய நாட்டின் வடகிழக்கே சோழ நாட்டு எல்லைக் கடற்கரையை அடுத்த பகுதியை ஆண்டு வந்த எவ்வி என்பான் படை. பலத்தோடு கானக்கோட்டையை அடைந்திருந்தான்.

தொண்டை நாட்டுத் திரையனும், நாஞ்சில் தலைவனும், கடற்கரையைத் தனிச் சாம்ராஜ்யமாக ஆண்டு வந்த பரதவர் களும் துணையிருப்பதாகச் செய்தி அறிவித்து விட்டார்கள்.

பரதவர்கள் மட்டும் கோட்டையுள் வாராது வெளியிலிருந்தே சூழ்ந்து கள்ளப் போர் புரியக் காத்திருந்தனர்.

இவர்கள் யாவரும், உக்கிரப் பெரு வழுதியின் தந்தையான நெடுஞ்செழியரால் பழி வாங்கப் பட்டவர்கள். இப்போது அந்த வெறியைத் தீர்க்கக் காத்துக் கிடந் தனர்.

இந்த மகாயுத்தம் வல்லரசுகளுக்கும் சிற்றரசுகளுக்கும் மூளும் வரலாற்று யுத்த மாக இருந்தது.

வேங்கைவனத்திலோ...

திருமேனி அமைதியாகக் கவனித்து வரு கிறாள். அவள் கொஞ்சம் மனம் இரங்கினால் இந்த யுத்தம் தவிர்க்கப் படலாம்.

தியாகவல்லி எப்படியெல்லாமோ சொல் லிப்பார்த்தாள். திருமேனியின் பாட்டனார் நெடுஞ்செழியப் பாண்டியர் 'போர், போர்' என்று வெறி கொண்டு திரிந்ததால் அவரை அந்தப் போரிலிருந்து அமைதிக்கு அழைக்க நக்கீரனார் அருளிய *'நெடு நல் வாடை' எனும் காப்பியத்தை நினைவு கூரச் செய் கிறாள்.

வேங்கைமார்பனுடைய காதல் மூர்க்க மானதாக இருக்கலாம்.; ஆனால் அது ஒரு கோயிலின் மூர்த்தத்துக்குச் சமமானது என்று விண்டுரைக்கிறாள்...

திருமேனியின் செவிகள்தாம் திசைதப்பிப் போய் விட்டனவே!

தியாகவல்லியைச் சுட்டெரிப்பது போலக் கவனித்த திருமேனி, ''தியாகவல்லி! அதோ என் சிலையின் அடியில் நான் சமீபத்தில் பொறித்த வாசகங்களைப் பார்த்தாயா?'' என்றான்.

''அதற்கு அனுமதித்தவரும் வேங்கை மார்பன்தானே? 'எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே' என்று உங்கள் ஆசிரியை ஔவைப் பிராட்டியார் சொன்ன வாசகத்தை நாங்கள் அறிவோம். இங்கே வேங்கைமார்பன் வாழ்த்துக்குரிய நிலத்தலைவர்! வாழிய நிலனே என்று அவரைத்தான் வாழ்த்தி இருக்கிறீர்கள்!''

திருமேனி கலகலவென்று சிரிக்கிறான். ''வேங்கைமார்பன் வாழ்த்துக்குரிய நிலத்தலைவனா?''

திருமேனியின் கேள்விக்கு 'இல்லையென்றால் அவ்வாறு பொறிக்க அனுமதித்து இருப்பாரா?' என்று மறுமொழி கூறியிருக்கலாம். தேவையா?

தியாகவல்லி அதற்கப்புறம் அவனிடம் பேச்சு வைத்துக் கொள்வதையே நிறுத்திக் கொண்டாள். இவள் இரவை வெளிச்சமாக்க வந்தவள் என்று நினைக்கப் போய்ப் பகலை இருளாக்க வந்தவளாய் இருக்கிறாளே! இதனால் என்ன நிகழப்போகிறதோ?

**எ**ண்ணி இருபது நாட்களில்.
பாண்டியப் பேரரசின் தலைநகராம்
மதுரையில் கொட்டிய போர்
முரசம்: வேங்கைவனத்தில்
எதிரொலித்தது.

* டால்ஸ்டாய் 'போரும் அமைதியும்' எழுதியதற்கு எத்தனையோ பல ஆண்டுகள் முன்னதாக, அன்றைக்கே இதுபோன்ற ஒரு காப்பியத்தை நக்கீரர் பாடி இருக்கிறார் என்பது ஒவ்வொரு தமிழனும் பெருமைப் படக்கூடிய விஷயம்.



வேங்கைமார்பன், தினவு கண்டத் தோள்கள் வீங்க, திமிறிய மார்பு விம்மிப் புடைக்க, கெக்கலி கொட்டிச் சிரிக்கிறான்.

வானில் மெல்லிய தூறல்கள்.

கார் காலத்தில் இந்த யுத்தம் ஆரம்பமானது. யாருடைய துரதிர்ஷ்டத்துக்காகவோ?

கோட்டையில் முற்றுகை நீடித்தால் போதிய அளவுக்கு உணவுப் பொருட்கள் சேமிக்கப்பட்டிருக்கின்றனவா என்று கவனிக்கிறார் அமைச்சர் குறுமலைக்கிழார்.

படைகளை நடத்துவதில் கண்ணுங்கருத்துமாக வழிவகுப்பதில் ஈடுபட்டிருக்கிறான், காளிங்கன் இடத்தைக் கைப்பற்றிய சேனாதிபதி தென்னவன் வேளான். அவனுடன் கோட்டையின் மூன்றுவாயில் சேனாதிபதிகளும் துணை புரிகிறார்கள்.

பாண்டியப் படைகளுடன் வந்த மர்ம மனிதர்களான யவனர்களும், சோனகர்களும் எங்கே கைவைத்தால் எது வீழ்ந்துபடும் என்பதில் கண் கொத்திப் பாம்பாய் அலைகிறார்கள்.

கோட்டை வாசல்களைப் பலம் கொண்ட மட்டும் மூடிவிட உத்தரவிடுகிறான் வேந்தன் வேங்கைமார்பன். எத்தனை நாட்கள் தாம் முற்றுகையைச் சமாளிக்கிறார்கள் என்பதைப் பார்ப்போம்!

அதே நேரத்தில்...

திருமேனி கெக்கலி கொட்டிச் சிரிக்கிறாள். எவர் சபதம் நிறைவேறப் போகிறது என்கிற ஆணவச் சிரிப்பு அது...

பாண்டிய சேனா சமுத்திர வெள்ளம் கோட்டை வாசலையடைந்து விட்டது என்பதைத் தெரிவிக்க, அதோ, பயங்கரமாகப் போர்முரசம் ஒலிக்கிறது...

வேங்கையின் சேனா சமுத்திரம் எந்த நேரமும் கரையைக் கடக்கச் சித்தமாயிருப்பது போல அலையெழுச்சியுடன் காத்திருக்கிறது.

வீரச் சதுரங்கத்தில் காய்கள் நகரப் போகிற ஆவேசச் சிலிர்ப்பு...

---

இவர்: அவர்கள் ரெண்டு பேரும் 'ரைட்' சகோதரர்கள்!

அவர்: ஆகாய விமானத்தைக் கண்டு பிடிச்சவங்களா?

இவர்: இல்லே பஸ் கண்டக்டர்கள்!

—கடலூர் கன்னியப்பன்.



முரசொலிகள் கேட்டு வேங்கைகள் வேறு ஏதோ உற்பாதம் நிகழப் போகிறது என்பது போல உறுமுகின்றன.

பளிங்கு வாசற்படிகளில் அமர்ந்து மோவாய்க் கட்டையில் வலக்கையூன்றிப் போர் முரசத்தில் லயித்து இருக்கிறாள் திருமேனி.

வேங்கைகள் மேலும், உறுமுகின்றன. அவற்றைக் கவனிக்க இப்போது வேங்கைமார்பனுக்கு நேரமேது?

தியாகவல்லி இப்போதெல்லாம் வேங்கைவனத்திலிருப்பதில்லை. அவளது மனம் பெரிதாகக் கசந்து போய் விட்டது. இலங்கையை அழிக்க வந்த சீதையாகவே கருதினாள். இலங்கைதான் அழிகிறதோ? அல்லது அயோத்திதான் எரியப் போகிறதோ?

திருமேனியின் மீது எவ்வளவு சிறப்பான மரியாதை கொண்டிருந்தாளோ, அத்தனையும் பொடிந்து போயின.

இப்படி ஒரு பெண்ணைக் காதலித்து, சிறையெடுத்து வந்ததல்லாது, இன்னமும் அந்த மோகினியழகில் மோகம் கொண்டிருக்கும் வேங்கைமார்பனைச் சொல்ல வேண்டும் என்று நைந்து கொள்கிறாள்.

என்ன செய்ய?

இப்போது காதலைவிடக் கௌரவப் பிரச்னைகள் இருமுனைகளிலும் பேயாகத் தலைவிரித்தாடுகின்றன...

வேங்கைவனத்தில் திருமேனி மட்டுமே இருந்தாள். எங்கோ வேலி வாசலுக்கு இரு காவலர்கள். போர்முகில் சூழ்ந்த நேரமாயிற்றே!

உறுமிக் கொண்டிருக்கும் வேங்கைகளைப் பார்வையிடத் துணிந்து எழுந்து செல்கிறாள் திருமேனி.

கம்பிகளுக்குள் அடைபட்ட இரு வேங்கைகளும் அவளைக் கண்டு உறுமோ உறுமென்று உறுமுகின்றன.

'எங்களைத் திறந்து விடேன், எங்கள் தலைவனின் காதலி!' என்று கெஞ்சுவன போலிருக்கின்றன அந்த உறுமல்கள்.

வேடிக்கையாகச் சிரிக்கிறாள் திருமேனி. கையசைத்து 'வா' என்கிறாள்.

வேங்கைகளும் முன்னங்கைகளால் கம்பிகளை அறைய, பழைய ஞாபகம் வந்து எங்கே வெளியே உடைத்துக் கொண்டு வந்து விடுமோ என்றஞ்சி விறுவிறுவென்று மாளிகைக்குச் சென்று கதவைச் சாத்திக் கொண்டாள்.

அங்கே...

அதுவரை ஒரு பைராகி கோலத்தில் சாளரத்தையொட்டி நின்று கொண்டிருந்தான் காளிங்கன்.

''என்ன காளிங்கா?''

''மெதுவாகப் பேசுங்கள். வெளியில் பாண்டியப் படைகள் முற்றுகையிடத் தொடங்கி விட்டன. இப்போது நான் கோட்டையைத் திறக்க ஆவன செய்ய வேண்டும். என்னுடன் நமது மன்னரால் அனுப்பப் பெற்ற யவனர்களும், சோனகர்களும் சேர்ந்திருக்கிறார்கள்.''

''வெற்றிக்கு வழி தேடுங்கள்.''

# இதோ உங்கள் மெய்க்காப்பாளர்!




அனல் விட்டச்... அதுவே நாம் தினம் வெளிப்படுத்தும் வியர்வை அளவு. அதனால் என்ன ஏற்படும் என்று நீங்கள் அறிவீர்கள். அந்த தவிர்க்கமுடியாத துர்நாற்றத்தை ஸின்த்தால் ஒன்றே அறவே தடுக்கவல்லது. ஸின்த்தால்—30 வருடங்களாக நம்பகத்துக்குரிய பெயர்—சரும கிருமிகளை அழிக்க, துர்நாற்றத்தைத் தவிர்க்கவல்ல ஒரே குடும்ப சோப். உங்களை புத்தம்புது மலரென நறுமணத்துடன் நாள் முழுவதும் திகழச் செய்யும்.

**கோத்ரெஜ்**

**ஸின்த்தால் துர்நாற்றத்தைப் போக்கும் சோப்**

அனைவர் மெய்க்கும்
அவசியமான மெய்க்காப்பாளர்

CHAITRA-B G 1189 TAM

"வெற்றிக்குப் பிறகு நீங்கள் எனக்கு அளிக்கப் போகும் பரிசு?"

"இந்த வேங்கைவனத்துக்குப் பிரதிநிதியாக்குவேன்!"

"அது மட்டுமா?"

'உன்னை எனக்குப் பரிசாகக் கொடுத்தால் கோட்டையைத் திறக்க முயல்வேன்' என்று கூறத்தான் வாயெடுத்தான். திருமேனி இடைமறித்துச் சொன்னாள்: "வெற்றிக்குப் பிறகு உங்களுக்கு என்ன கொடுக்க வேண்டும் என்பது எனக்குத் தெரியும்."

இதற்குள் தொலைவில் வேங்கைமார்பன் வருவதைக் கண்ட காளிங்கன், திருமேனி சொன்னதைத் தவறாகப் புரிந்து கொண்டு மறைந்து சென்று ஒரு புதருள் ஐக்கியமாகி ஊர்ந்தே சென்றான். இதுவரையில் அவன், இருக்கிற பன்னிரண்டு சுரங்கங்களில் சிலைச் சுரங்கம் நீங்கி இரண்டை வகையாகக் கண்டுபிடித்து வைத்திருந்தான்.

போர் முரசங்கள் ஒலித்த வண்ணம்இருக்கின்றன.

பளிங்கறையிலிருந்து விறுவிறுவென்று ஓடி வந்த திருமேனி பழையபடி படிக்கட்டுகளில் மோவாயில் கையூன்றி அமர்ந்து கொண்டாள். இக்காட்சியைத் தொலைவில் இருந்து கவனித்துக் கொண்டிருந்தவள் தியாகவல்லி.

அண்ணன் காளிங்கன் இங்கேதான் இருக்கிறார்! அடிக்கடி திருமேனியைச் சந்திக்கிறார். அடப்பாவி! இவ்வளவுக்கும் நீதான் காரணமா என்று மனம் சபிக்கிறது.

வேங்கைமார்பனோ...

வட்டுடை தரித்துப் போர் முகம் நோக்கிச் செல்ல வேண்டியவன், பூமுகம் காண வந்திருக்கிறான். வழக்கத்துக்கு மாறாக திறந்த மார்புடன் மேல் உத்தரியத்துடன் வந்து நின்ற கோலம்...

வேங்கைமார்பன் என்ற பெயர்கொண்ட வேங்கையின் மார்பகத்தைத் திருமேனி அதுவரை கண்டாளில்லை.

பரந்து விரிந்த திரட்சி நிறைந்த இந்த மார்பில் அம்பும் நுழைய அஞ்சுமே என்றும் அவளால் எண்ணிப் பார்க்க முடிந்தது.

ஆனால் தியாகவல்லி அடிக்கடி சொல்லி இருக்கிறாள், அவரது மார்பு வேங்கை மார்பல்ல; வீர அபிமன்யுவின் மார்பு என்று.

தியாகவல்லி, பளிங்கு மாளிகையின் பின்புற வழியில் புகுந்து மெல்ல நுழைந்து முன்புறக் கதவைத் தாழிட்டு விடுகிறாள்.

ஏன்?

ஏதோ ஒரு சூதான நாடகத்தை அரங்கேற்றத் துணிந்திருக்கிறாள்.

வெளி வாயிலில்...

"திருமேனி போர் ஆயத்தமாகி விட்டது!"

"எதிர்பார்த்ததுதானே?"

"நீ நினைத்தால் இப்போதும் இந்த யுத்தத்தை நிறுத்தலாம். சற்றுக் காலத் தாமதமானாலும் யாராலும் இதனை நிறுத்த முடியாது."

"அவசியமில்லை. இந்த யுத்தம் எனது விடுதலை யுத்தம்!"



ராமு: "உங்க அம்மாவை 'mum'னு கூப்பிடுற நீ, உங்க சின்னம்மா, பெரியம்மாக்களை எப்படிக் கூப்பிடுவே?"

சோமு: 'minimum; maximum 'னு தான்!"

—பால. கோவிந்தராஜ்.

---

"ஏன்? நான் தமிழனுக்குப் பிறந்தவன் என்பதை நிரூபிக்கும் யுத்தமாகவுமிருக்கலாம் அல்லவா?"

"எனக்கு அது குறித்துக் கவலையில்லை. நான் தமிழுக்குரியவள்."

"இத்தனை உயிர்கள் சாக வேண்டுமா?"

"அந்தச் சாவில் தான் எனது மானம் காக்கப்படுமானால் சாகட்டும்!"

வெறுத்துப் போனான் வேங்கைமார்பன்: "நீ ஒரு பெண் தானா?"

விரக்தியோடு சிரிக்கிறாள் திருமேனி: "சந்தேகமென்ன? நீங்கள் ஓர் ஆண் என்பது நிஜமானால் நானும் ஒரு பெண் தான்!"

பேச்சு முற்றி வருகிற சமயத்தில்....

யாரோ வேங்கைகள் அடைபட்ட கதவுகளைத் திறந்து விட்டுவிட...

பயங்கர உறுமல்களுடன் வேங்கைகள் சீறிப் பாய்ந்து ஓடிவருவதைக் கண்டு, வேகமாக மாளிகையினுள் நுழையக்கதவைத் திறக்க...

அது உட்புறமாகத் தாழிடப்பட்டிருப்பதைக் கண்டு அரண்டு, மருண்டு போனாள் திருமேனி.

வேங்கைகளிரண்டும் பயங்கரமாக வாயைத் திறந்து கொண்டு மாளிகை நோக்கிப் பாய்ந்து வருகின்றன.

என்ன செய்வாள் திருமேனி?

உடல் நடுங்க வியர்த்துக் கொட்டியது.

தன்னை மறந்து, தனது நிலை மறந்து, தான் பேசி வந்த பேச்சை மறந்து ஓடோடிச் சென்று வேங்கை மார்பனைச் சேர்த்து அணைத்துக் கொண்டு "வேங்கை, வேங்கை"யென்று நாக்குழறக் கதறுகிறாள்.

வேங்கைமார்பனது பரந்த அந்த அபிமன்யு மார்பில் தலை புதைத்து அரற்றுகிறாள்: "துரத்துங்கள், துரத்துங்கள்!"

அருகே வந்த வேங்கைகளிரண்டும் முன்னங்கால்களைத் தூக்கி அவர்கள் மீது வைத்துத் தத்தம் கூரிய பற்களைக் காட்டி வாயைப் பிளந்து உறும...

அப்படியே மயங்கி அந்த வேங்கை மார்பிலேயே சாய்ந்து போனாள் திருமேனி.

(தொடரும்)

ஒளிவீசிடும் விழாக்கால ஆடைகள்

கோ-ஆப்டெக்ஸ்
பட்டு,
பருத்தி,
பாலியஸ்டர்
ஷிப்பான் சேலைகள்




சிறப்புத் தள்ளுபடி

10.10.84 முதல்
23.10.84 வரை



கோ-ஆப்டெக்ஸ்
கைத்தறி

பொன்விழா ஆண்டு

DIPR-210/84 ELEGANT

## வாரியார் நோக்கில்

# முன்வரிசைப் பிரமுகர்கள்

**வா**ரியார் சுவாமிகளின் கதை என்றால் குழந்தைகளுக்குக் கொண்டாட்டம் தான். முன் வரிசையில் கனஜோராக அமர்ந்து கொண்டு வாரியார் தாத்தாவின் குறும்புத்தனமான கதை சொல்லும் பாணியை, இந்தப் பச்சைக் குருத்துக்கள் ரசிக்கிற மாதிரி மற்றவர்களால் ஆகுமோ? தவிர, அவர்களுக்குச் சின்னச் சின்னப் புத்தகங்கள் வேறு கிடைக்குமே!

பிஞ்சு வயதில், பக்குவமான பக்தி நெறியை ஊட்டத் தொடங்கினால்தான் எதிர்காலத்தில் அவர்கள் தரமான மக்களாக வர முடியும் என்பதை நன்கு உணர்ந்தவர், உணர்த்துகிறவர் வாரியார் சுவாமிகள்.

கடைசி காலத்தில் காது கேட்காமல், கண் தெரியாமல், புலன்களெல்லாம் ஒடுங்கிப் போன பிறகு 'முருகா' என்றால் ஒன்றும் பிரயோசனமே இல்லை என்பார் சுவாமிகள்.

வலுவுள்ள போதே சம்பாதித்துப் பிற்காலத்துக்குச் சேர்த்து வைக்கிற மாதிரி, தானியங்களைப் பருவ காலத்தில் சேமித்து வைக்கிற மாதிரி, பக்தி உணர்வையும் சிறு வயதிலிருந்தே சேமித்தால் தான் கடைசி காலத்தில் கைகொடுக்கும் என்பார்.

ஒரு பெட்டியில் அப்பன் முருகன். சிங்கப்பூர், மலேஷியா, லண்டன் என்று எங்கே போனாலும் கூடவே செல்வான். ஆசாரமாக, உணவு செய்து அப்பனுக்கு நிவேதனம் பண்ணிய பிறகு தான் சாப்பாடு என்கிற நியதி எந்த இடத்திலும் மாறுவதில்லை.

பூஜையில் கூட ஒரு தத்துவம் சொல்வார். ''காலையில் பூஜை பண்ணணும்னு, சூடம், பன்னீர், பழம், புஷ்பம் எல்லாவற்றையும் முதல் நாளே வாங்கி வைத்துக் கொள்கிறோமே அதே மாதிரி ஆன்மீகச் சிந்தனைகளையும் முன் கூட்டியே சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும்.''

வாரியார் சுவாமிகளுக்கு ரசிகர்கள் எல்லா ஏஜ் குரூப்பிலும் உண்டு. சின்னப் பொடிசுகள், வளர்ந்த மாணவர்கள், பேராசிரியர்கள், நடுத்தர வயது, தாத்தாக்கள், பாட்டிகள் — என்று எல்லாத் தரப்பினரையும் அவருடைய வாக்கு வன்மை கவர்ந்து விடும். நாஸ்திகர்கள் என்று சொல்லப்படுகிறவர்களைக் கூட 'என்னதான் சொல்கிறார் கேட்போமே' என்று வந்து நிற்கப்பண்ணி விடுவார்.

சுவாமிகளின் ஸ்பெஷாலிடி குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைக்கிற நகைச்சுவை தான். ஒரு சமயம் இப்படிப் பேசினார்: ''பகைவர் இருக்கலாம். பகையினால் துன்பம் இருக்கக் கூடாது. குழந்தை இருக்கலாம். அதனுடைய சேஷ்டைகள் கூடாது... சம்சாரம் இருக்கலாம். சங்கடங்கள் இருக்கக் கூடாது. இப்போது என்னடா என்றால் சம்சாரமும், மின்சாரமும் தான் அடிக்கடி தகராறு பண்ணுகிறது...''

வெடிச்சிரிப்பில் ஜனசமுத்திரமே பொங்குகிற மாதிரி இருக்கும்.

சுவாமிகளின் சொந்த ஊர் வயற்காடு மாவட்டம் காங்கேயநல்லூர். இந்த செப்டம்பரில் எழுபத்தொன்பது வயது ஆரம்பம். பட்டை பட்டையாக விபூதி ருத்ராக்ஷத்துடன் அவரைப் பார்க்கிற போது; முருகனை வயதான கோலத்தில் பார்க்கிற மாதிரியே ஒரு பிரமை உண்டாகும்.

சின்ன வயசில் வாரியார் சுவாமிகள் பள்ளிக்கூடம் சென்றதே இல்லை. ஆன்மீக வழியில் போதனை செய்து அவரை இந்த வழியில் உருவாக்க அடித்தளம் போட்டவர் அவருடைய தந்தைதான். சுவாமிகளின் குருநாதர் என்றால் அருணகிரிநாதர்தான்.

அவருடைய வாதங்கள் சுவையானவை என்று சொல்ல வேண்டியதில்லை. யாராவது வேறு ஒரு மதநூலைக் குறிப்பிட்டு அதில் இப்படி இருக்கிறது என்று சொன்னால், சட்டென்று நம்முடைய நூல்களிலிருந்து அதற்கு ஈடான ஒன்றை எடுத்துச் சொல்வார். ஹிந்து தர்மத்திலே இல்லாத எதுவுமே இல்லை என்பது அவருடைய அழுத்தமான நம்பிக்கை.

மலேசியாவிலும் மற்ற இடங்களிலும் சுவாமிகளுடைய அளாவல் காரணமாகப் புலால் நீக்கியவர்கள் நிறையப் பேர்.

எல்லோரும் 'விதி' என்ற ஒன்றுக்குக் கட்டுப்பட்டேயாக வேண்டும். சீட்டாட்டத்தில் கிடைக்கிற கார்டுகள் மாதிரிதான் வாழ்க்கையும். வைத்துக் கொண்டு விளையாடுகிறவனுடைய சாமர்த்தியம் தான் — என்றெல்லாம் லௌகிகமான விஷயங்கள் மூலம் ஆன்மீக உணர்வுகளைக் கிளறி விட்டால் யார்தான் கேட்க மறுப்பார்கள்?

வருமானம் முழுவதும் அறப் பணிகளுக்கும் ஆன்மீகப் பணிகளுக்கும் என்றே போய் விடும். நடத்தியுள்ள கும்பாபிஷேகங்களும் திருப்பணிகளும் கணக்கே இல்லை.

64—வது நாயன்மாராகவே பக்தர்களால் போற்றப்படும் வாரியார் சுவாமிகளின் 80—வது பிறந்த தினத்தை அடுத்த ஆண்டு தமிழகம் பெருமிதப் பூரிப்புடன் கோலாகலமாகக் கொண்டாடும் என்பதை நினைக்க இப்போதே மெய்சிலிர்க்கிறது நமக்கு.

சென்னை கோடம்பாக்கம் சுப்பிரமணிய நகர் சங்கர ஜெயந்திக் கமிட்டிக் காரியதரிசி திரு. **ஜி. பி. ஹரன்** கூறியவை:

தொகுப்பு: **சுப்ரபாலன்**

வண்ணப்படம்: **ஓம். சுப்பிரமணியம்**

## தெய்வ தரிசனம்



○ உற்சவர் நடராஜர் — பாபநாசம் கோவில்

பாபநாசம் என்று பெயர் பெற்ற தலத்தினருகே பொதிகை மலையில் ஏறிச் செல்லும் போது குறிஞ்சி நிலத்தின் அழகில் மனத்தைப் பறி கொடுக்கிறோம். இலேசாக மழை பெய்து கொண்டிருக்கிறது. மாலை வெய்யிலும் மரகதப் பசுமையும் நீலநிறத் தண்ணீரும் சேர்ந்தாலே தெய்வ தரிசனம் தான். இயற்கை அன்னையின் இடையில் தவழும் நவரத்தின ஒட்டியாணமாக மின்னும் வானவில். அத்தனை ஜீவராசிகளுக்கும் அன்னையான தேவியை, மீனாக்ஷியை, உலகம்மையை, மரகதாம்பிகை என்று அழைப்பது இப்படிப் பசுமையாக இருந்து அவள் உலகுக்கு உணவும், உடையும், நிழலும் தருவதால் தானோ?

கொஞ்ச தூரம் மலை ஏறிச் சென்றதும் இடது பக்கத்தில் அருவி தெரிகிறது. சற்றுக் கீழே ஒரு கோவிலும் தெரிகிறது. அதுதான் அகத்தியர் கோவில் என்று அறிகிறோம். மலை மேலிருந்து உயரத்தில் ஒரு நீர்வீழ்ச்சி தெரிகிறது. அதுதான் கல்யாணி தீர்த்தம். அதனருகே ஒரு மண்டபம். அது அந்தக் கல்யாணி தீர்த்தத்தில் விழுந்து மறைந்து போன தேச பக்தர் வ. வே. சு. ஐயரின் ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்டிருக்கிறது.

சுமார் 300 அடி உயரத்திலிருந்து விழும் நீர் ஒரு பள்ளத்தில் விழுந்து மறுபடியும் பொங்கி வழிகிறது. அகத்தியர் கோவிலுக்கு அருகிலிருப்பதால் இதற்கு அகத்தியர் அருவி என்றே பெயர். தூரத்திலிருந்து பார்க்கும் போது இந்த அருவி ஐந்து கிளைகளாகப் பிரிந்து விழுவதும் அங்கிருந்து ஆறாகப் பெருகி ஓடுவதும் கண்கொள்ளாக் காட்சி.

அருவியைக் கண்டால் சும்மா மேலே போய் விட முடியுமா? பிரும்மானந்தமான ஸ்நானம். தண் பொருநை ஆற்றின் பெருமையை நினைத்துக்கொண்டே நீராடிவிட்டுக் கிளம்புகிறோம். மலை மீதுள்ள சொரி முத்தையன் கோவில் என்று வழங்கப்படும் சாஸ்தா கோவிலுக்குப் போய் முதலில் தரிசனம் செய்து விட்டுத் திரும்பி வந்து அகஸ்தியரைத் தரிசிக்கலாம் என்று மலை ஏறுகிறோம். நல்ல பாதை. காரில் சென்றால் முக்கால் மணி நேரத்தில் சொரி முத்தையன் கோவிலை அடையலாம்.



○ பாபநாசம் கோவில் முகப்பு

கோவில் கட்டப்பட்டுள்ள இடத்தை அடைந்ததும் முதலில் ''ஆகா எப்படிப் பட்ட அழகு வாய்ந்த இடத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்'' என்று பிரமிக்கிறோம். நான்கு புறமும் மலைச்சிகரங்கள். கோவில் சற்று மேடான இடத்தில் அமைந்திருக்கிறது. பொருநையின் நீர் கோவிலை நோக்கி ஓடிவந்து, கோவிலின் சமீபத்தில் வளைந்து திரும்பிச் சரிவில் மெல்லத் தவழ்கிறது.

# முத்துச்சொரிந்த ஐயனும் முக்களாலிங்கரும்

**ஆனந்தி**

கோவிலின் அமைப்பு அந்த இயற்கையோடு பொருந்தியிருக்கும் அழகைக் கண்டு மகிழ்ச்சியாக இருக்கிறது. எளிமையான தோற்றம். கேரள பாணி. பாலத்தைக் கடந்து கோவிலை அடைகிறோம்.

இந்தக் கோவில் சிங்கம்பட்டி ஜமீன்தாரான ஸ்ரீ முருகதாஸ் தீர்த்தபதி அவர்களின் மேற்பார்வையில் இருக்கிறது. இவர் பரம்பரை டிரஸ்டி. ஆடி அமாவாசை இங்கு ரொம்ப விசேஷம். தர்ம சாஸ்தாவுடைய ஸப்த க்ஷேத்திரங்களில் தமிழ்நாட்டில் இருப்பது இந்தத் தலம் ஒன்றுதான். அதிலும் இது மூலாதார க்ஷேத்ரம் என்று கருதப்படுகிறது. மற்ற கோவில்கள் எல்லாம் கேரளத்தில் இருக்கின்றன.

பயபக்தியுடனே கோவிலுக்குள் பிரவேசிக்கிறோம். முதலில் சங்கிலி பூதத்தார் சந்நிதி. உக்ரமானவர். இவரை அகத்திய முனிவர் கட்டுப்படுத்தியதாகக் கூறுகிறார்கள். சிங்கம்பட்டி ஜமீன்தார் குடும்பத்தினரின் இஷ்ட தெய்வம் இவர்.

இந்தக் கோவிலுக்குரிய தெய்வம் சாஸ்தாவானாலும் இங்கே மகாலிங்கர் சந்நிதி இருக்கிறது. எத்தனையோ காலத்துக்கு முன்பு இந்த வழியாக வியாபாரிகள் தங்கள் பொருள்களை, குதிரை, கழுதை முதலிய மிருகங்களின் மேல் ஏற்றிக் கொண்டு போய்

○ அகத்தியர் அருவி



வருவார்களாம். ஒரு கல்லின் மீது குளம்படி பட்ட போது இரத்தம் வழிந்ததைக்கண்ட வியாபாரிகள் திகைத்துப் போனார்கள். அந்தக் கல்லைச் சுற்றி அகழ்ந்து பார்த்த போது அங்கே ஒரு சுயம்பு லிங்கம் இருந்ததைக் கண்டு அதிசயித்து வழிபடத் தொடங்கினார்கள். ஆகக்கூடி இது முதலில் மகாலிங்கர் கோவிலாக இருந்து மற்ற தெய்வங்கள் பின்னால் பிரதிஷ்டை செய்யப்பட்டு வளர்ந்திருக்கலாம்.

இங்குள்ள பல சன்னதிகளுள் பட்டவராய சுவாமி என்பவர் ஒரு சிறந்த போர் வீரராக இருந்து வீரமரணம் எய்தியவர். அவர் தெய்வமாகி விட்டதாக நம்பிக்கை. பட்டவராய சுவாமி சந்நிதியில் செருப்புக்கள். காணிக்கையாகக் கட்டித்தொங்க விடப்பட்டிருக்கின்றன. பட்டவராயருடைய இரு மனைவியரும் செருப்புத் தைப்பவரின் குலத்தில் பிறந்தவர்கள் என்றும், அதனால் இந்தப் பழக்கம் என்றும் கூறினார்கள்.

இந்தக் கோவிலுக்கும் மேலே உள்ள பாண தீர்த்தம் மிகவும் புனிதமான இடம். தூய்மையும் எழிலும் கொஞ்சும் பிரதேசம்.

இறங்கி வரும் போது அகஸ்தியரையும் முருகப் பெருமானையும் தரிசனம் செய்து கொள்கிறோம். வள்ளி தேவசேனா சமேதராக முருகப் பெருமான் சந்நிதி சமீபகாலத் திருப்பணி. அகஸ்திய முனிவர் பூஜை செய்த ஸ்படிக லிங்கத்தை இந்த சந்நிதியில் கண்டு மகிழலாம்.

தமிழ்க் கடவுளும், தமிழ் முனிவரும் ஒன்றாக அமர்ந்திருக்கும் கோவிலை வலம் வருகிறோம். அகத்தியர் சந்நிதியில் சந்தன மூர்த்தால் செதுக்கப்பட்ட அகத்தியர்பெருமானைத் தரிசனம் செய்கிறோம். தமிழ் வளர்க்க இதைவிட அழகான சூழ்நிலை இருக்க முடியாது. அகத்திய முனிவர் பரம ரஸிகராக இருக்க வேண்டும். பொதிகை மலையில் வந்து குடியேறி இருக்கிறாரே!

அடுத்து பாபநாசம் கோவிலுக்குச் செல்கிறோம்.

சுதேசமித்திரன் பத்திரிகையாசிரியராக இருந்த காலத்தில் பாரதியார் பாபநாசம் சென்று வந்ததைப் பற்றி எழுதியிருக்கிறார்:*

''ஒலி வடிவமான கடவுளை முன்னோர் ''நாத ப்ருஹ்மம்'' என்றனர். இந்த ஒலிக் கடவுளை ஒருவன் உபாசனை செய்ய விரும்

○ ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ள கல்யாணசுந்தரர் - பாபநாசம் கோயில்



பிறகு அவன் பாபநாசத்தில் வந்து வாழக் கடவன்...

'''ஓம் சக்தி', 'ஓம் சக்தி', 'ஓம் சக்தி' என்று நதி ஒலிப்பதாகப் பாவனை செய்து கொள்வோமாயின் அப்பால் நமக்கு மந்த்ர ஜபத்தில் எவ்விதமான கஷ்டமுமில்லை. 'ஓம் சக்தி' 'ஓம் சக்தி' என்று இந்த நதி இன்னும் எத்தனையோ சதுர் யுகங்கள் வரை சொல்லிக் கொண்டே தான் இருக்கப் போகிறது. அதை மனச்செவியால் கேட்டுக் கொண்டிருப்பதே நமக்கு உயர்ந்த சாதனை மாய் விடும்.''

பாபநாசத்தில் தாமிரபரணி நதிக்கு தக்ஷிண கங்கை என்று பெயர் வழங்குகிறது. நதி வடக்கு நோக்கி உத்தர வாஹினியாக ஓடுகிறது.

கோவிலை நோக்கித் திரும்பவாம்.' முக்களா லிங்கர் தாமாகவே தோன்றியவர். களா மரத்தடியை உகந்த பெருமான். இங்கு மூன்று வேதங்கள் களா மரங்களாகவும் அதர்வண வேதம் ஆகாயமாகவும் இருந்து பூஜை செய்ததால் முக்களாலிங்கர் எனவும், பழமறை நாயகர் எனவும் பெயர் பெற்றார் இறைவன். ஈசனுடைய திருமணக்கோலத்தைக் காணத் தவம் செய்த பொதிகை வாழ் முனிவருக்கும், மகா பதிவிரதையான லோபா முத்திரைக்கும் சித்திரை விஷுவில் ரிஷபாரூடராகத் தரிசனம் கொடுத்தார். அதனால் கல்யாணலிங்கர் என்றும் பெயர் பெற்றிருக்கிறார்.

இங்குள்ள கல்யாண சுந்தரப் பெருமான் மிக அழகான வடிவம். ஒரே கல்லில் விடை ஏறும் பெருமான் திருவாசி இலங்கக் காட்சி தருகிறார். அருகில் இமவான் புதல்வி. அகஸ்தியரும் அவர் பத்தினி லோபாமுத்திரையும் தரிசித்த கோலம்.

அகத்திய முனிவரே உலகம்மையை இங்கு பிரதிஷ்டை செய்தாராம். தமிழ் முனிவ ரால் பூஜிக்கப்பட்ட அம்மைக்குத் தமிழ் மொழி மீதும் தமிழ் பாடும் கவிஞர் மீதும் தனிக் கருணை இருப்பதில் அதிசயம் இல்லை. சுமார் இருநூற்றைம்பது ஆண்டு களுக்கு முன்னால் நமச்சிவாயர் என்ற புலவர் இந்த அன்னையிடம் அளவில்லாத பக்தி கொண்டு தினமும் தரிசிக்க வருவார். உடனே வாக்கிலிருந்து தமிழ் பெருகும். வீடு திரும்பும் வழியில் இனிக்கும் பாடல் களைப் பாடிக் கொண்டே நடந்து போவார். அதில் மயங்கிய உலகம்மை அப்படியே அவர் பின்னால் மெல்ல நடந்து வருவார்.

ஒருநாளிரவு நமச்சிவாயக் கவிராயர் தாம்பூலம் தரித்திருந்தார். அதை உமிழவே அருகிலேயே வந்து கொண்டிருந்த உலகம் மையின் சேலையின் மீது தெறித்து விட்டது. மறுநாள் காலை அதைக் கண்ட அர்ச்சகர் மனம் குழம்பித் தவித்தார். இதைக் கேள்விப்பட்ட மதுரை மன்னர் மிகவும் வருத்தப்பட்டுக் கோவிலுக்குப் புண்ணியா வசனம் முதலியன செய்வித்தார். அன்றிரவு அரசர் கனவில் உலகம்மை தோன்றி ''செந்தமிழ்ப் பாடல்களைக் கேட்கும் ஆர்வத் தில் நமச்சிவாயக் கவியின் பின்னாலேயே நான் சென்றதால் இப்படி நேர்ந்தது'' என்று கூறினாள்.

அரசனுக்கு நமச்சிவாயக் கவியைச் சோதிக்க வேண்டுமென்று தோன்றியது. மென்மையே உருக் கொண்ட தேவியின் கரத்தில் ஒரு பூச்செண்டை வைத்துக் கம்பி களால் கட்டினார்கள். கவிஞரைக் கவி பாடச் சொன்னார்கள். நமச்சிவாயக்கவிஞர் உலகம்மையின் மீது அந்தாதி பாடத் தொடங்கினார். ஒவ்வொரு கவிதைக்கும் ஒரு கம்பியாக அறுந்து வந்தது.

> விண்டல நின்றசரற்கால சந்த்ர'கவேதமுக
> மண்டல முங்கை மலரோடுந் தோளின்
> வழிந்தரத்ன
> குண்டல மும்பொலி வாலப் பிராயக்
> குமாரத்தியாய்ச்
> செண்டவர் செங்கைஉலகா ளென்நாவிற்
> சிறந்தனளே!

என்ற கவிதையைப் பாடியதும் அம்பிகை யின் கையில் இருந்த பூச்செண்டு நமச் சிவாயக் கவிஞர் கையில் விழுந்து விட்டது.

தமிழின், தமிழிலே உருவான பக்திப் பாடலின் சக்தி அத்தகையது!

* ஏ. கே. செட்டியார் தொகுத்துள்ள 'தமிழ்நாடு''

# உள்ளம் துள்ளும் தீபாவளிப் பரிசு !

**ஹேண்ட்லூம் ஹவுஸ்** வழங்கும்

## 20%

## சிறப்புத் தள்ளுபடி

1 10-84 முதல் 22-10-84 வரை
எல்லா ரகங்களுக்கும் உண்டு.
பிரிண்டட் பட்டு, ஆர்கென்ஸா
புடவைகள் மற்றும் குறிப்பிட்ட
ரகங்களுக்கு மேலும்

## 20%

சிறப்புத்
தள்ளுபடி
உண்டு.



**ஹேண்ட்லூம் ஹவுஸ்**

ADWAVE

**7, ரத்தன் பஜார், சென்னை 600 003**

- கோயம்புத்தூர் :
  512, திவான் பகதூர் ரோடு,
  R.S. புரம், கோயம்புத்தூர் 641 002
- திருச்சி :
  ''சுமங்கலி''
  பட்டு கூட்டுறவு சூப்பர் மார்க்கெட்,
  464, பெரிய கடை வீதி, திருச்சி 620 008

---

- ஞாயிறு மற்றும் விடுமுறை தினங்களிலும் திறந்திருக்கும்



# இலவச மாப்பிள்ளை

## நீங்கள் கேட்டவை தராசு

○ வண்ணை கணேசன், சென்னை—11.

? சமீபத்தில் எம். ஜி ஆர். செய்த நல்ல காரியம் ஒன்று...?

! ராஜராஜன் விழாவுக்குப் பிரதமரே வந்தால்தான் அவன் தகுதிக்குப் பொருத்தமாயிருக்கும் என்று தேதியை ஒத்திப் போட்டு நடத்திவைத்ததுதான். தமிழக சரித்திரத்தில் ஒரு மகோன்னத மான பொற்காலத்தை உருவாக்கியவன் அருள்மொழிவர்மன் என்றாலும் மக்க ளின் வரிப்பணம் இது போன்ற விழாக் களில் செலவிடப்பட வேண்டுமா என் றால் அதற்குப் பதில் ஆயிரமாவது ஆண்டு என்பது ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு முறைதான் வரும் என்பதே. அதைக் கொண்டாடுவது கடமை. விழா நடந்த முறையில் குறைகள் சில இருந்தாலும் நிறைகளும் நிறையவே இருந்தன.

○ டி. ராஜேந்திரன், திருப்பூர்.

? கள்ள வோட்டுக்களைத் தடுத்தாலே ஜனநாய கத்தைக் காப்பாற்றி விடலாம் என எம். ஜி. ஆர். கூறியது ஏற்றுக் கொள்ளக் கூடியதா?

! ஜனநாயகத்தை அழிப்பதற்குக் கள்ள வோட்டுக்களைத் தவிர வேறு பல வழி களும் உண்டு. என்றாலும் கள்ளவோட் டுக்களைத் தடுக்க வேண்டும் என்ற முதல்வரின் கருத்து சரியானதே. ஒரு சங்கடம் என்னவென்றால் மாற்றுக்கட்சிக் காரர்கள் போடும் கள்ள வோட்டுக்களை மட்டுமே ஒவ்வொரு கட்சித் தலைமையும் கள்ள வோட்டாகக் கருதுகிறது —அதே காரியத்தைத் தங்கள் கட்சிக்காரர்களும் செய்வதை மறந்து விடுவது சௌகரிய மாய் இருக்கிறது.

○ எம். செல்லையா, சாத்தூர் ★

? இந்தியாவில் ஜனதிபதி ஆட்சிமுறை கூடாது என்று கலைஞர் கருணாநிதி எதிர்ப்புத் தெரி வித்துள்ளாரே?

! பல்வேறு மொழி கலாச்சாரங்கள் உள்ள இந்தியாவில் ஜனதிபதி மக்களால் நேரடி யாகத் தேர்ந்தெடுக்கப்படும்போது தென் னிந்தியர் ஒருவர் ஜனதிபதியாவது சாத்தியமில்லாமலே போகலாம் என்ற அவரது கருத்து சரியானது. நமது பார்லிமெண்டரி ஜனநாயகத்தை உரு வாக்கிய மேதைகள் இதையெல்லாம் யோசிக்காமலா இருந்திருப்பார்கள்? அண் மையில் நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் ஜனதிபதி ஆட்சி முறை அமுல்படுத்தப் பட்டால் வடக்கு— தெற்கு பூசலும் மொழி ரீதியான பூசலும் வலுக்கும் என்று கூறியுள்ளது கருணாநிதியின் கருத்தை ஆமோதிப்பதாகவே உள்ளது.

○ ஆர். சிவராஜ், லால்குடி.

? தொடர்ச்சியாகக் கிடைக்கும் தோல்விகளைத் தாங்கிக் கொள்வது எப்படி?

! ராபர்ட் புரூஸ் கதையை நினைவூட்டிக் கொள்வதன் மூலம்; தெரியாதென்றால் கேட்டறிந்து கொள்வதன் மூலம். நான் பள்ளியில் படித்த காலத்தில் இம்மாதிரி நல்ல உண்மைக் கதைகள் பாடப் புத்தகங்களில் இடம் பெறும்.

○ எஸ். கணேசன், கொடுமுடி.

? இலவச மின்சாரம் இப்போது, இலவச மாப்பிள்ளை எப்போது?

! இப்போதே ரெடி. ஆனால் மணப்பெண் பேரழகியாகவும், செல்வக் குடும்பத்தில் பிறந்தவளாகவும், கைநிறைய சம்பாதிப் பவளாகவும், ருசியாகச் சமைக்கத் தெரிந் தவளாகவும், வீட்டு வேலைகள் எல்லாம் தெரிந்தவளாகவும், டாக்டர் பட்டம் பெற்றவளாகவும், பாட்டு நடனக்கலைகள் பயின்றவளாகவும் இருக்க வேண்டும். இந்த நிபந்தனைகளைப் பூர்த்தி செய்பவர் களுக்கு மட்டுமே அரசு இலவச மாப் பிள்ளை வழங்கும்.

○ எஸ். பால் பாண்டியன், சிவகாசி.

? இல்லற வாழ்வின் மென்மையான உணர்வு களை அழகாகச் சித்திரிப்பதில் தங்களைக் கவர்ந்த இன்றைய எழுத்தாளர் யார்?

! பாலகுமாரன்... அதுசரி, இதற்கு ஏன் ரிப்ளைகார்டு அனுப்பியிருக்கிறீர்கள்?

○ பாரதி ரங்கன், கும்பகோணம்.

? ஆட்சியிலிருப்பவருக்கும் அமைச்சர்களுக்கும் மக்கள் மதிப்பே தருவதில்லை என்பதற்கு யார் காரணம்?

! மதிப்பு ஏற்படுமாறு அவர்கள் நடந்து கொள்ளாததுதான் காரணம்.

○ என். பாலகிருஷ்ணன், கோவை.

? முந்தானை முடிச்சு பாக்கியராஜ் தாவணிக் கனவுகள் பாக்கியராஜ் — ஒப்பிடவும்.



○ சீரியஸ்லாக...

○ மீண்டும் காப்டன்

# எப்போது?



○ விதவிதமான டிரஸ்



○ மென்மை உணர்வுகள்...



○ ஒப்பிடுக...

! இந்த வாரத்தின் அதிக பட்சக் கேள்விகள் இதேதான்! அது நம்மை முட்டாளாக்கிய முருங்கைக்காய் விஷயம். இது சமுதாயப் பிரச்சினைகளால் முறுக்கேறிய விஷயம். என்றாலும் வேலையில்லா திண்டாட்டம், வரதட்சிணை கொடுமை, மதுவிலக்கு என்று கொஞ்சம் ஓவர் டோஸ்தான். இரண்டுக்கும் பொது நளின நகைச்சுவை.

○ பி. ஜே. எஸ். கென்னடி, ஆலந்தூர்.

? கல்கியின் பொன்னியின் செல்வன் கதையைப் படமாக்கப் போவதாக முதல்வர் கூறியுள்ளாரே?

! ஆமாம், கூறியிருக்கிறார். நூற்றிஒராவது முறையாக.

○ ஜி. சிவக்குமார், பழனி.

? திருப்பதியில் ஐந்து மணி நேரம் வரை கால் கடுக்க கியூவில் நின்று தரிசனம் செய்கையில் வேக வேகமாய்ப் பிடித்து இழுத்து வெளியே தள்ளி விடுகிறார்களே, நியாயமா?

! உங்களுக்குப் பின்னால் நீண்ட க்யூவில் நிற்பவரும் உங்களைப் போலவே ஐந்து மணி நேரமாக நிற்பவர் என்பதை யோசித்தால் வருத்தமுண்டாகாது. அதிகக் கட்டணம் செலுத்திச் சாவகாசமாகப் பார்ப்பதென்பது முடியாத போது ஏமாற்றத்தைத் தவிர்க்க ஒரே வழி இறைவன் சர்வ வியாபி, நமது இதயத்திலேயே இருக்கிறார் என்பதை உணர்வதுதான்...

○ மா. புகழேந்தி, வாணியம்பாடி.

? வரப் போவது முன்கூட்டியே தெரிந்து விட்டால்?

! வாழ்க்கை 'சப்.'

○ எம். ராஜேந்திரன், வால்குடி.

? கவாஸ்கரை மீண்டும் காப்டனாக்கியது சரியா?

! அவர் ஜெயித்தால் சரி என்றும் தோற்றால் தவறு என்றும் தேர்வாளர்கள் விமர்சனத்துக்கு உள்ளாவார்கள். கபில் ஐந்து நாள் மேட்ச்களில் ஜெயிக்கவில்லை என்பதும், முட்டி சரியில்லை என்பதும் காரணங்களாகக் கூறப்படுகின்றன. மற்ற ஆட்டக்காரர்களின் முழு ஒத்துழைப்பை கவாஸ்கராலேயே பெற முடியும் என்று கருதப்படுகிறது. ஒன்று நிச்சயம், தேர்வாளர்கள் புதிய பரிசோதனைகளில் தைரியமாக இறங்கி ரிஸ்க் எடுக்கத் தயாராயில்லை.

○ மங்களா சேஷாத்ரி சென்னை—50.

? வெள்ளி விழா டி. வி. நிகழ்ச்சியில் தங்களைக் கவர்ந்த அம்சம்?

! பல பேர் மிஸ் பண்ணியிருப்பார்கள். இரவு பத்தரை மணிக்கு மேல் பன்னிரண்டு மணி வரை நடைபெற்ற இசை நிகழ்ச்சி. பிரபலமான பின்னணிப்பாடகர்களை ஹேமமாலினி விதம் விதமான டிரஸ்களில் தோன்றி அறிமுகம் செய்ய, லதா மங்கேஷ்கர், நம்ம ஊர் ஜானகி, மகம்மது ரஃபி, (ஒட்டு வேலை) ஆஷா போஸ்லே என்று பலர் கலந்துகொண்ட இசை வெள்ளம். கலரில் பார்த்து ரசித்திருக்க வேண்டும்; என் அதிர்ஷ்டம் என்னிடம் கறுப்பு வெளுப்பு டி. வி. தான்.

○ ஆர். முருகப்பா, கோவை.

? தியேட்டர் நடத்துவது லாபமா? ஓட்டல் நடத்துவது லாபமா?

! சூடாகவும், ருசியாகவும் கொடுத்தால் இரண்டும் லாபம்தான்.

○ மனோபாரதி, பாண்டிச்சேரி.

? சுகத்தைத் தேடி அலையலாமா?

! ஆன்ம சுகத்தைத் தேடி அலையலாம். பிரச்சினை இல்லை. மற்ற சில சுகங்களைத் தேடி அலைவதெனில் முதுகில் டின் கட்டிக் கொள்ளத் தயங்காதவராய் இருக்க வேண்டும்.

○ என். செல்வராஜ், கரூர்.

? கஷ்டமான பதவி எது? கவர்னர் பதவியா? ஜனாதிபதி பதவியா?

! ஜெயில்சிங் போல் பதவியை சீரியஸாக எடுத்துக் கொண்டால் இரண்டுமே கஷ்டமான பதவிதான்; ரப்பர் ஸ்டாம்பாக இருப்பதென்றால் இரண்டுமே சுலபம்தான்.

✦ ரூ. 10 பரிசு பெறுபவர்:
எம். செல்லையா,
257—ஏ, ரயில்வே பீடர் ரோடு,
சாத்தூர் — 626 203.

## அறிவை வளர்க்க
## அரியதோர் அறிவுச் சுரங்கம்!



# குழந்தைகள் கலைக்களஞ்சியம்

இளம் வயதிலேயே விஞ்ஞான உண்மைகளைப் பற்றி குழந்தைகள் எளிதாகப் புரிந்து கொள்வதற்கு அழகான விளக்கப் படங்களுடன் ஆயிரத்துக்கும் அதிகமான சிறுசிறு கட்டுரைகள் கொண்டது.

10 தொகுதிகள் அடங்கிய ஒரு தொகுப்பின் விலை ரூ. 250/-

பள்ளிகளும், நூலகங்களும் அவசியம் வாங்கிப் பயன் பெறக் கூடிய அறிவுப் பொக்கிஷம்.

*நீங்கள் வாங்கும் குழந்தைகள் கலைக்களஞ்சியத் தொகுப்பு ஒவ்வொன்றுடனும் தமிழ்க் கலைக்களஞ்சியம் 10ஆம் தொகுதியின் பிரதி ஒன்று (700 பக்கங்கள்) இலவசமாக வழங்கப்படும்.*



*கிடைக்குமிடம் :*

**தமிழ் வளர்ச்சிக் கழகம்**
பல்கலைக்கழகக் கட்டடம்
(பாரத ஸ்டேட் பாங்கு
அலுவலகத்தின் மேல் மாடி)
தபாற்பெட்டி எண் 439
சென்னை 600 005.
தொலைபேசி எண்: 845440

யோகாசன மகிமை

# திரிகோணாசனம்



ஆசனம் பழகுகிறவர்கள் ஆகார விஷயங்களில் நியமமாக இருக்க வேண்டும். மனத்தை அடக்கி, அளவாக உண்பது ஆசனம், தியானம் பழகுவோருக்கு எளிது. குறிப்பிட்ட நேரத்தில் மட்டுமே சாப்பிட வேண்டும். இடையிடையே நொறுக்குத் தீனி எதையேனும் மென்று கொண்டிருக்கக் கூடாது. அன்னத்தைக் குறைத்து, காய்கறி பழங்கள் சாப்பிடுவது நல்லது. வசதி குறைவானவருக்கு மலிவான கீரை, பச்சை வாழைப்பழம் போன்றவையே போதும்.

ஆசனங்கள் மூலம் நோயைத் தவிர்ப்பது தான் இந்தக் கட்டுரைத் தொடரில் முக்கியமாகக் கூறப்படுகிறது. நோயைக் குணப்படுத்திக் கொள்ள டாக்டர்கள், யோகாசன நிபுணர்களை அணுக வேண்டும். ''பார்வை கூர்மை பெற திரிகோணாசனம் குறிப்பாக உதவும்'' என்கிறார் டாக்டர் **கே. கோவிந்த பட்**. சென்னை அருகேயுள்ள முட்டுக்காடு இயற்கை வைத்திய நிலையத்தில் பயிற்சியளித்து வருகிறார் இவர்.

**பயிற்சி முறை:**

திரிகோணம்என்பது முக்கோண அமைப்பு. நேராக நிமிர்ந்து நின்று கால்களை மூன்று அடி வரை அகற்றி வைத்துக்கொள்ள வேண்டும். தோள் மட்டத்துக்கு இரண்டு கைகளையும் பக்கவாட்டில் நீட்டிக் கொள்ள வேண்டும். உள்ளங்கை தரையை நோக்கி இருக்க வேண்டும்.

இடுப்பையும், உடம்பையும் அப்படியே வலப்புறம் மெல்ல வளைக்க வேண்டும். வலது கையால், வலது கால் கட்டை விரலைத் தொட வேண்டும். முழங்கால் முட்டி அசையாமல் இருக்க வேண்டும். இடது கை மேல் நோக்கி நீட்டப்பட்டிருக்கும். கழுத்தைத் திருப்பி இடதுகைவிரல் நுனியைப் பார்க்க வேண்டும். இப்படியே இடப்புறம் வளைந்து, இடது கால் கட்டை விரலைத் தொட்டு வலது கையை மேலே உயர்த்தி, கழுத்தை மேலே திருப்பி விரல் நுனியைப் பார்க்க வேண்டும். சம நிலைக்கு மெதுவாகத் திரும்ப வேண்டும்.

இதையே இன்னும் ஒரு விதமாகவும் செய்யலாம். முன்போல் கால்களை மூன்று அடி அகற்றி வைத்துக் கொண்டு நின்று, உடம்பை மட்டும் பக்கவாட்டில் திருப்பி, இடது கையால் வலது கால் கட்டை விரலையும், வலது கையால் இடது கால் கட்டை விரலையும் தொட வேண்டும். இந்த நிலையிலும் மேல் நோக்கிப் பார்த்து கைவிரல்களின் நுனிப் பகுதியைப் பார்க்க வேண்டும்.

பெருங்குடல், சிறுகுடல்கள் சரிவர இயங்க இந்தப் பயிற்சி உதவும். 'லம்பார் ஸ்பாண்டிலோடிஸ்' நோய், மலச்சிக்கல் கோளாறுகள், ஜீரணக் கோளாறுகள், சிறு நீரகக் கோளாறுகள், பார்வைக் கோளாறு வயிற்றுப் பகுதியில் சதை போடுதல் போன்றவற்றை இந்த ஆசனப் பயிற்சியால் தவிர்த்து விடலாம்.

சிறுவர்களானால் கால்களை இரண்டு அடி வரை அகற்றி வைத்துக் கொண்டால் போதுமானது. மாத விலக்குக் காலத்தில் அதிகமான இரத்தப் போக்கு உடைய பெண்கள் இந்தப் பயிற்சியில் ஈடுபடக் கூடாது. ஒரு முறை, சிறு நீரகம் பாதிக்கப் பட்டிருப்பினும் அவர்கள் திரிகோணாசனம் செய்யக் கூடாது. மற்றபடி அனைவரும் செய்யக் கூடிய எளிய ஆஸனம் தான் இது.

பேட்டிக் கட்டுரை: **சுப்ர.பாலன்**
படத்தில் ஆசனம் பழகுபவர்:
**டி. எஸ். சௌதாமினி**
புகைப்படம்: **தாமு**

---

ஸ்கூட்டர் போன்ற இலேசான வாகனங்கள் ஓட்டுபவர்களின் வசதியைக் கருதி, இந்தியாவிலேயே முதன் முறையாக ''பிளாஸ்டிக் டிரைவிங் லைசென்ஸ்''ஸை கர்நாடக அரசு அறிமுகப்படுத்தியுள்ளது. இதை சட்டைப் பாக்கெட்டில் அடங்கக் கூடிய அளவுக்கு அழகான வடிவத்தில் அமைத்திருக்கிறார்கள். இதில் வாகனம் ஓட்டுபவரின் தொலைபேசி எண் மற்றும், இரத்த குரூப் ஆகிய அடையாள விவரங்கள் அடங்கியிருக்கும்.

நன்றி: தினச்சுடர்.
மு. புஷ்பராசன்.



# தலைவலி பலவகை உண்டு

# சிகிச்சை ஒன்றே ஒன்று!

# அனஸின்

## இதில் அதிக அளவில் வலி-நிவாரணி அடங்கியுள்ளது

துரித நிவாரணம் அளிக்க, உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும், வலி-நிவாரணி மருந்து அதிக அளவில் கொண்டது—அனஸின்.

தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ, முதுகு வலி, தசை வலி, பல் வலி ஆகியவற்றிற்கு நல்ல பலனளிக்கிறது.

அனஸின் மீது மட்டுமே நம்பிக்கை வையுங்கள்.

இப்போது பாதுகாப்பான ஃபாயில் உறையில்.



சக்தி வாய்ந்த நம்பகமான
மேனர்ஸ்
அனஸின்*

இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி மருந்து

* Licensed user of T.M. : Geoffrey Manners & Co.Ltd.

GM-2-83 TM

# அஞ்சலியல்ல அழைப்பு

காந்தி... நீ இன்று
    பாக்ஸ் ஆபீஸ் ஹிட்டு – அது
ஈ.டியையும் பின் தள்ளி
    ஆஸ்கார் தந்த ஷொட்டு!

உன் நினைவு கூட இங்கே
    நிழலில் தான் ரசிக்கிறது
உன் நிஜங்கள் பாடப் புத்தகத்தில்
    மட்டும் தான் இருக்கிறது.

என் வாழ்வேஎன் செய்தியென
    சத்திய சோதனை செய்த மகாத்மாவே
உன் சத்தியங்களுக்கே இன்று
    சுதந்திர இந்தியாவில் சோதனை.

நிறவெறி கண்டு சினந்து நீ
    சமத்துவத் தீ மூட்டினாய் – இன்று
மதவெறி மறுபிறப் பெடுத்துள்ளது.
    திடுக்கிட்டுப் பதறாதே காந்தி.

கறுப்பர், வெளுப்பர் என இனம்
    பிரித்தது கண்டு பதைத்தாயே
கறுப்புப் பணமே அரசியலில் இன்று
    வெள்ளையரைப் படைப்பது காண்!

இந்நாட்டின் ஆதாரம் கிராமம்
    என்று போற்றிய காந்தி.
காமிராவுக்குப் பச்சை தவிர
    அங்கே வளர்ச்சியேதும் கண்டாயா?

நள்ளிரவில் நகைபூட்டிய பெண்ணைத்
    தனியே நடத்தி ராமராஜ்யம் என்றாய்
பகல் வெளிச்சத்திலேயே தங்கம் பூட்டிப்
    பெண்ணை மதிப்பிடும் பாரதம் பாராய்!

சுய ஆட்சி அதுதான் வழி என்று கூவி
    வெள்ளையனை வெளியேற்றினாய்
நாங்கள் லைசென்ஸ், பர்மிட் என்று
    நேர்மையையே வெளியேற்றிவிட்டோம்

சுதந்திர இந்தியாவில் மலிவாகக்
                    கிடைப்பதும்
    நாட்டையே மலிவாக்கியதும் மது.
உன் நினைவாக இன்றுமட்டும் கடை
                    அடைப்பு;
    நானே சேர்த்துப் போடலாம் –புல்லாக.

'நல்லவேளை நான் போய்ச்சேர்ந்தேன்'
    எனப் பொக்கைவாய் சிரிக்கலாமா?
'சம்பவாமி யுகே யுகே' எனப்
    பிறந்து வழிகாட்ட வேண்டாமா?

காத்திருக்கிறோம், மகாத்மாவே –ஆத்மா
                    சாகாத
    சிலர் இன்னும் உனக்காகக்
காத்திருக்கிறோம் – நாடு காக்க நீ
    சீக்கிரம் பிறந்து வா.

உஷா சுப்ரமணியன்





## வெள்ளித்திரை

# சத்தியம் நீயே

ராமன் எத்தனை ராமனடி?

பட்டிக்காடா பட்டணமா?

போன்ற படங்களைக் கொடுத்த பி. மாதவன் டைரக்ட் பண்ணியிருக்கும் படம்.

பண்ணையார். பண்ணையாரே அடி வருடும் இன்னொரு பணக்காரன். இந்த பூஷ்வாக்களை எதிர்க்கும் ஏழைகளின் காவலன் கதாநாயகன்.

கொட்டாவியை அடக்க முடியவில்லை அல்லவா உங்களுக்கு?

ஆயிரத்தொன்றாவது முறையாக அதே பழைய கனி: கதை என்னும் பெயரில்.

கதாநாயகன் — இந்த மாதிரிப் படங்களுக்கென்றே இப்போது தயாராகி வரும் அதே விஜயகாந்த். கோபமாய்ச் சிவப்பு விழிகளுடன் விழிக்கிறார். அசடு நிறைய வழியச் சிரிக்கிறார். சிலம்புச் சண்டை என்ற பெயரில் கோலாட்டம் போடுகிறார். கடைசியில் ஜெயிக்கிறார் — சத்தியம்நீயே?

விஜி கதாநாயகி. கல்லூரியில் படித்த மாடர்ன் கேர்ள். சாணி தெளிக்கிறார் (சமூக சேவை) கூரை வேய்கிறார். நடுசந்தில் செங்கல் அடுக்கிப் பள்ளம் மூடுகிறார். ஒவ்வொரு முறையும் மூக்குடைபடுகிறார். இதைத்தவிர கதாநாயகனுடன் ஒரு டூயட். பாவம். இவர் நிஜமாகவே நடிக்கிறேன் என்று வரிந்து கட்டிக் கொண்டு வந்தால் கூட யாரும் வாய்ப்புத் தர மாட்டார்களோ என்று ஐயம் ஏற்படுகிறது.

முதற்காட்சிக்கு அடுத்த காட்சியில் ஜி. சீனிவாசன் 'சங்கு' என்று அதட்டுவதும் 'ஐதலே' என்று சாமிக்கண்ணு சொல்வதும் பரவாயில்லை என்று சொல்லலாம் என்று பார்த்தால் கீறல் விழுந்த ரிகார்ட் மாதிரி அதே வசனத்தை நாலைந்து முறைகள் ரிபீட் செய்கிறார்களா, சலித்துப் போகிறது.

முதல் சண்டைக் காட்சியில் வீட்டில் உள்ள பித்தளை, அலுமினிய, வெண்கலப் பாத்திரங்களை வைத்துக் கொண்டு மனம் போன படி தட்டினால் — அது ஒரு ம்யூஸிக். இன்னொரு சண்டைக் காட்சியில் போகி மேளத்தைத் தென்னங்குச்சியால் தட்டினால்— அது ஒரு ம்யூஸிக். — யாராம்? நம் சங்கர்— கணேஷ்தான். 'என் வானில்' பாட்டுபரவாயில்லை ரகம்.

'தலையைப்- பிய்ச்சுக்கலாம்' என்று சொல்லிவிட்டுச் செந்தில் அதையே செய்து காட்டும் இடம் இருக்கிறதே — குமட்டிக் கொண்டு வருகிறது.

ஆறுதல் நம்பர் ஒன்று. ஜாஸ் மோகன். ஆறுதல் நம்பர் இரண்டு: 'வெடுக் வெடுக்' என்று பேசிவிட்டுத் துள்ளித் துள்ளி ஓடி ஒரேயடியாக ஓய்ந்து விடும் இளவரசி.

புதுமுகமாய் அறிமுகம் ஆகிறவர்கள் நல்ல ரோலில் அறிமுகமாக வேண்டும். அருணுக்குத் துரைக்கண்ணு என்று ஒரு உப்புக்குச் சப்பாணி ரோல். ஏறக்குறைய கோழையாக இருந்து விட்டு, அந்த இடிந்த சுவர்களுக்கிடையில் சண்டை போடும் இடத்தைச் சொல்லலாம். பஞ்சாயத்து கோர்ட்டில் 'ஜட்ஜி'ற்கு எதிரில் தகப்பனை மடிய வைக்கும் இடத்தை மெல்லலாம்.

பி. மாதவனின் பழைய சரக்குகள் வெகு ஜோரானவை.

— ஜெயமன்மதன்





உங்களுக்காகவே

# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு குணு கூந்தல் தைலம்

தலை மயிர் உதிர்தல், செம்பட்டை நிறம்,
பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும்.
தினசரி தலைக்குத் தடவி வந்தால் தலை மயிர்
நீண்டு கறுத்து அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு,
பொடுகு, மண்டையில் சொறிந்தால் செதில் உரிதல்
குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும்
விரும்பி உபயோகிக்கின்றனர்
1 பாட்டில் விலை ரூ 16-25 V.P.P. உண்டு
தபால் செலவு இல்லை.

தேவைக்கு எழுதவும் **நவசக்தி வைத்தியசாலை**

**தபால் பெட்டி எண் 7 சேலம் 636 001**

---

*எமது தைலம் கிடைக்குமிடங்கள்:* 1. சேலம்—ரோக மெடிக்கல்ஸ். 2. ஆத்தூர்—முத்து மெடிக்கல்ஸ், 3. நாமக்கல்—கஸ்தூரியா மெடிக்கல்ஸ். 4. ராசிபுரம்—ராசி மெடிக்கல் ஸ்டோர்ஸ், 5. மேட்டூர்—ஜெயலஷ்மி மெடிக்கல்ஸ், 6. திருச்செங்கோடு—சீனிவாசா மெடிக்கல்ஸ், 7. தர்மபுரி—விஜயலஷ்மி மெடிக்கல்ஸ் 8. கிருஷ்ணகிரி—கோபாலகிருஷ்ணா மெடிக்கல்ஸ் 9. ஒசூர்—மூர்த்தி மெடிக்கல்ஸ் 10. பெங்களூர்—பிரசாத் ஸ்டோர்ஸ் K.G. சர்கிள். 11. சென்னை-3—ஹேமா மெடிக்கல்ஸ். 12. அமிஞ்சிகரை—வேலவன் மெடிக்கல்ஸ் 13. குடியாத்தம்—திருமகள் மெடிக்கல்ஸ். 14. காஞ்சிபுரம்—லஷ்மி மெடிக்கல்ஸ். 15. அரக்கோணம்—அகிலாம்பிகை மெடிக்கல்ஸ். 16. ஆரணி—பாக்கியம் அண்ட் கோ., மருந்துகடை. 17. திருவண்ணாமலை—அன்னை மெடிக்கல்ஸ். 18. வேலூர் (NA)—பாரத் மெடிக்கல்ஸ். 19. திருப்பத்தூர் (NA)—லஷ்மி மெடிக்கல்ஸ் 20. விழுப்புரம்—அன்பு மெடிக்கல்ஸ் 21 கள்ளக்குறிச்சி—A. ராஜீ நாட்டு மருந்துக்கடை. 22. கும்பகோணம்—செல்வம் மெடிக்கல்ஸ். 23. தஞ்சாவூர்—சிட்டி மெடிக்கல்ஸ். 24. திருச்சி—சண்முகா மெடிக்கல் ஹால் 25. திண்டுக்கல் தமிழ்நாடு சித்த மருந்துக்கடை 26. பெரியகுளம்—N. லஷ்மணன் மருந்துக்கடை. 27. தேனி—ஆண்டாள் மெடிக்கல்ஸ்—28. மதுரை—குமார் மெடிக்கல்ஸ். 29. மதுரை—ஸ்டேட் மெடிக்கல் கார்பரேசன் (24 மணி நேர கடை). 30. ராமநாதபுரம்—பாத்மா மெடிக்கல்ஸ். 31. காரைக்குடி—மலேசியா ஜெனரல் ஸ்டோர்ஸ். 32. விருதுநகர்—S.S.K. மெடிக்கல்ஸ். 33 தூத்துக்குடி—அன்பு மெடிக்கல்ஸ். 34. திருநெல்வேலி—கோமதி மெடிக்கல்ஸ். 35. பாளையங்கோட்டை—ஒலிவா இந்தியன் மெடிக்கல்ஸ் 36. நாகர்கோவில்—S. நல்ல பெருமாள் மருந்துக்கடை. 37. தென்காசி—M.R. மெடிக்கல்ஸ். 38. ராஜபாளையம்—அரவிந்த் மெடிக்கல்ஸ். 39. சிவகாசி—சிவகாசி மெடிக்கல்ஸ். 40. கோவில்பட்டி—சாந்தி மெடிக்கல்ஸ்—41. ஸ்ரீ வில்லிபுத்தூர்—பாலாஜி மெடிக்கல்ஸ். 42. உடுமலை—ஜாம் ஜாம் மெடிக்கல்ஸ் 43. பொள்ளாச்சி—ராமநாதன் மெடிக்கல்ஸ் 44. கோவை—காசிநாத் அண்ட் கோ., 45. கோவை—திருமலை மெடிக்கல்ஸ் காந்திபுரம் 46. திருப்பூர்—கீதா மெடிக்கல்ஸ். 47. அவினாசி—அவினாசி மெடிக்கல்ஸ் 48. கோபி—வாணி பார்மஸி 49. ஈரோடு—ஸ்ரீ ராகவேந்திரசாமி மெடிக்கல்ஸ் 50. திருச்சி ஜங்—சுபாஸ்ரீ மெடிக்கல்ஸ் 51. புதுக்கோட்டை—மீனு பார்மஸி 52. திருவாரூர்—அன்னபூர்ணா மெடிக்கல்ஸ் 53. மாயவரம்—ஸ்வாமி மெடிக்கல்ஸ் 54. சிதம்பரம்—ராஜா மெடிக்கல்ஸ் 55. விருத்தாசலம்—ஜெயா பார்மஸி 56. சேலம் செவ்வாய்பேட்டை—பிரபாத் மெடிக்கல்ஸ் 57. தொட்டியம்—மீனாஷி மெடிக்கல்ஸ் 58. கிருஷ்ணகிரி - பி. கே. பி. எம். ஜி. மெடிக்கல்ஸ் 59. கரூர் - அண்ணாமலை மெடிக்கல்ஸ். 60. நாமக்கல்—சரஸ்வதி மெடிக்கல் ஹால். 61. காரைக்குடி சரோஜா ட்ரக்ஸ் ஸ்டோர்ஸ். 62. பாண்டிச்சேரி—ராஜா மெடிக்கல்ஸ்.

---

எமது இதர சித்த ஆயுர்வேத தயாரிப்புகளான நவரத்ன கல்பலேகியம், சில்வர் பில்ஸ், வாயுசூர், குணு மலசுத்தி சூரணம், நெல்லிக்காய் லேகியம் etc. எமது ஸ்டாக்கிஸ்ட்டுகளிடம் மற்றும் எல்லா மருந்துக்கடைகளிலும் கிடைக்கும்.



# குடும்பச் சண்டை அரசியலாகிறது!

ஆந்திர சட்டமன்றத் தேர்தலின் போது, ஆந்திரா வந்திருந்த மேனகாகாந்தியைச் சிறப்புப் பேட்டி காண விரும்பினேன். அவரைக் கண்டு பிடிப்பதே கஷ்டமாய் இருந்தது. ரொம்பப் பாடுபட்டு, அவரது கட்சி அலுவலகத்துடன் தொடர்பு கிடைத்தது. போனேன். விவரிக்க முடியாத ஒருவித சுற்றுப்புறம். ஒரு வீட்டின் மாடியில் கட்சி ஆபீஸ். போன போது மேனகா இல்லை. ஆனாலும் அங்கே — சினிமா வில்லன்களைப் போலவே சிலர் இருந்தனர்.— தம்மை மேனகா கட்சிக் காரர்கள் என்று சொல்லிக் கொண்டார்கள். ''மேனகாஜீ வெளியில் போயிருக்கிறார். எப்போது வருவார் என்று தெரியாது. இங்கேயே காத்திருங்கள்'' என்றனர். அந்தச் சூழ்நிலையும், அங்கே இருந்தவர்களையும் எனக்குத் துளிக் கூடப் பிடிக்கவில்லை. திரும்பிப் பார்க்காமல் நடையைக் கட்டினேன். பிறகு வேறு ஓரிடத்தில் மேனகாவைச் சந்தித்துப் பேட்டிகண்டேன்.

மேனகா பத்திரிகைக்காரர்களைச் சமாளிப்பதில் சாமர்த்தியசாலி. எந்தக் கேள்வியானாலும், பட்பட்டென பதில் சொல்லிவிடுவார். எதையும் சீரியஸாக எடுத்துக் கொள்ள மாட்டார். சில சமயங்களில் பதில் சொல்லிவிட்டு, இடம், சூழ்நிலை இவற்றையெல்லாம் மறந்து விட்டு, பள்ளியில் படிக்கிற பெண்ணைப் போலக் கலகலவெனச் சிரிக்க ஆரம்பித்து விடுவார். 'தான் ஒரு கட்சித் தலைவி' என்பதையும் மறந்து விட்டு இப்படி நடந்து கொள்கிறாரே என்று நம்மை ஆச்சரியப்பட வைப்பார்.

மேனகா தாம் ஒரு இளம் விதவை என்பதைத் தம் அரசியலுக்கு ஒரு கருவியாய்ப் பயன்படுத்திக் கொள்கிறார் என்பது முற்றிலும் உண்மை. என்.டி.ஆர். கூட, தேர்தலின் போது, வேறு எந்தக் கட்சியுடனும் கூட்டணி அமைத்துக் கொள்ளாவிட்டாலும் சஞ்சய் விசார் மஞ்சிற்கு ஐந்து இடங்கள் தந்தார் எனில், இதற்கு ஒரே காரணம், ''மேனகாபரிதாபத்துக்குரியஇளம்விதவை'' என்பதுதான். ஆனால் சமீபத்தில் என்.டி. ஆரிடம் பேசிக் கொண்டிருந்த போது, 'தான் மேனகா மீது இத்தனை பரிதாப உணர்வு காட்டியிருக்க வேண்டிய அவசியம் இல்லை' என்றே சொன்னார். (சமீபத்தில் ஆந்திர அரசியல் விவகாரங்களின் போது என்.டி.ஆரின் எதிர் அணியில் இருந்தனர் ச.வி. மஞ்ச் எம்.எல். ஏக்கள்.)

மேனகாவைப் பொறுத்தவரை, அரசியல் என்பதற்கு அர்த்தமே, இந்திராகாந்திக்கு எதிராய் ஏதாவது செய்வது என்பதுதான். மற்றவர்கள் இந்திராவை அரசியல் ரீதியாய் எதிர்க்கிறார்கள். ஆனால் மேனகா அப்படி இல்லை. அவரிடம், உங்கள் கட்சி எதற்காக? கட்சியின் கொள்கை என்ன?' என்று கேட்டால், ''தேர்தலில் நின்று இந்திராகாந்திரஸை சில இடங்களிலாவது தோற்கடிக்க வேண்டும் என்பதுதான்'' என்பார் பளிச்சென்று. இப்படியாகத் தனக்கும், இந்திராவுக்குமிடையே நிலவுகிற குடும்ப விவகாரங்களை, மேடைக்குக் கொண்டு வந்து அரசியலாக்கி, அதனால் தமக்கு ஏதாவது ஆதாயம் கிடைக்குமா என்று பார்ப்பவர் அவர்.

அவரைப் பார்ப்பவர்களுக்கு, அவருடன் பேசுபவர்களுக்கு, அவர் ஏதோ அதிகத் தன்னம்பிக்கை கொண்டிருப்பவரைப்போலத் தோன்றும். உண்மையில், அடிப்படைக் கொள்கைகள் ஏதும் இல்லாமல் ''என்ன தான் ஆகிவிடும்? ஒரு கை பார்க்கலாமே?'' என்று ஒருவித குருட்டுத் தைரியத்துடன் செயல்படுகிறார் மேனகா.

அண்மையில் அவர் எந்த ஒரு பெண்மணியுமே செய்யத் துணியாத காரியத்தைச் செய்திருக்கிறார். தன் மகன் வருணை மேடையில் நிறுத்தி, ''என் பாட்டியான் இந்திராகாந்தி, என் அம்மாவைக்கொடுமைப் படுத்துகிறார்'' என்று சொல்ல வைத்திருக்கிறார்.

மேனகா போன்ற அரசியல்வாதிகள் இருப்பது, ஆரோக்கியமான அரசியலுக்கு நல்லதில்லை.

**அனிதா பிரதாப் கூறக்கேட்டு எழுதியவர்**
**எஸ். சந்திரமௌளி**



## குளோஸ் அப்

தமிழக இ. காங்கிரஸ்

# ஒருங்கிணைப்புக் குழு உடையுமா?



○ ஏ. கே. அந்தோணி

"எனது ரசிகர் மன்றப் பிள்ளைகள் யாராவது கட்சிக் கட்டுப்பாட்டை மீறி நடந்து கொண்டார்கள் என்று தெரிந்தால் என்னை நானே தீயிட்டுக் கொள்வேன்" என்று உணர்ச்சிகரமாகச் சொன்னார் நடிகர் திலகம் சிவாஜி. இதைக் கேட்டதும் "அண்ணன் சிவாஜி வாழ்க" என்ற கோஷம் கூட்டத்தின் ஒரு பகுதியிலிருந்து எழுந்தது.

தமிழ்நாடு, பாண்டிச்சேரி, கர்நாடகா, ஆந்திரா மாநிலங்களின் காங்கிரஸ் விஷயங்களைக் கவனிக்கும் இ. காங்கிரஸ் பொதுச் செயலாளர் ஏ.கே. அந்தோணி தலைமையில் கூட்டம் நடந்தது. தமிழக இ. காங்கிரஸ் கோஷ்டித் தலைவர்களான, சிவாஜி, மூப்பனார், ஆகியோர் ஒரே மேடையில் அமர்ந்திருந்தனர். இதுவே ஒரு சாதனைதான்.

கோஷ்டிப் பூசலைத் தீர்த்து ஒற்றுமையை வளர்க்க சமீபத்தில் தமிழக இ. காங்கிரஸில் ஓர் இணைப்புக் குழு அமைக்கப்பட்டுள்ளது.

அன்று மூப்பனார் பேச வரும்போது, சிவாஜி ரசிகர்கள் முணுமுணுத்துக்கொண்டது வேடிக்கையாக இருந்தது. தாங்கள் தான் இ. காங்கிரஸ் கட்சியை வளர்த்துவருபவர்கள் என்ற எண்ணம் சிவாஜி மன்றத்தினருக்கு நிறையவே இருக்கிறது. "மூப்பனார் ஒரு காகிதப்புலி. பத்திரிகைகளில் அறிக்கை விட்டுக் கொண்டே, தமக்கு ஏதோ பெரிய ஆதரவு இருக்கிறது என்பது போல் காட்டிக் கொள்ளுவார். ஆனால் சென்னையில் ஒரு கூட்டம் போட்டு இவர் பேசுகிறார் என்றால் மேடையின் எதிரில் காலியாகத்தான் இருக்கும்" என்றார் சிவாஜி ரசிகர் ஒருவர். மாவட்டங்களில் பல மாநாடுகள் நடத்தித் தமது பலத்தைக் காட்டிய பின்பும் சிவாஜிக்கு தமிழ்நாடு தலைமைப் பதவியைத் தரமாட்டேன் என்கிறார்களே என்ற ஆதங்கம் நிறையவே இருக்கிறது ரசிகர்களுக்கு.

ஒவ்வொரு இடைத் தேர்தல் முடிந்ததும் காங்கிரஸ் தோற்றவுடன் தலைவர் பலிகடா ஆக்கப்படுவார் (பெரியகுளம்: எம். பி. எஸ், திருச்செந்தூர்: மரகதம் சந்திரசேகர்). ஆனால் தஞ்சாவூர் இ. காங்கிரஸுக்கு வெற்றியைத் தேடிக் கொடுத்து விட்டது. "தோற்று விட்டிருந்தால் பழனியாண்டியின் தலைமைப் பதவியைப் பறித்திருப்பார்களே" என்று ரகசியமாகப் பேசிக் கொண்ட ரசிகர்களும் உண்டு.

"இனிமேல் கோஷ்டியெல்லாம் கிடையாது: எல்லாம் இந்திரா கோஷ்டிதான். காங்கிரஸ் பெரிய ஆலமரம். இதைப் போன்ற சில்லறை கோஷ்டி சமாசாரங்கள் இருந்து கொண்டுதான் இருக்கும். பத்திரிகையாளர்கள் இதைப் பெரிதுபடுத்தாமலிருந்தாலே எங்களுக்குப் பேருதவிதான்" என்று முன்னுக்குப் பின் முரணாகக் கூறினார் கேரளத்துக்காரரான ஏ. கே. அந்தோணி.

"கர்நாடகாவில் கான் இன்னும் நான் முறைப்படி நீக்கப்படவில்லை என்று கூறியுள்ளாரே?"

"அவர் காங்கிரஸிலிருந்து வெளியேற்றப் பட்டு விட்டார். இதற்கு மேல் எதுவும் கேட்காதீர்கள்!" தொடர்ந்து, "ஆந்திராவில் மீண்டும் என். டி. ஆரை ஆட்சிக்கு அமர்த்தியதில் இந்திராவுக்குப் பெரும்பங்கு உண்டு. உண்மையான ஜனநாயகவாதி அவர் என்று நிரூபித்து விட்டார். மக்கள் இதைப் புரிந்து கொண்டுள்ளார்கள்" என்றார் அந்தோணி!

48 வயதாகும் அந்தோணி ரொம்ப சிம்பிள். வெஜிடேரியன் சாப்பாடுதான். மீன் இவர் கணக்குப்படி வெஜிடேரியனில் சேர்த்தி. கல்யாணமாகாதவர். காலையில் அரை மணி நேரம் 'வாக்' போகிறார். சிரித்த முகம். கோபத்தைத் தூண்டும் கேள்விகளுக்குக் கூடச் சிரித்துக் கொண்டே பதில். "எனக்கு தமிழ் நன்றாகப் புரியும். ஆனால் பேச வராது" என்கிறார்.

"தமிழக இ. காங்கிரஸில் அமைக்கப் பட்டுள்ள ஒருங்கிணைப்புக் குழு நிச்சயம் ஒற்றுமையை வளர்த்து காங்கிரஸைத் தமிழ் நாட்டில் வளர்க்கும்" என்கிறார் அந்தோணி. பார்க்கலாம்.

-நமது நிருபர்

படம்: சுபா

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

# Arpana means Business when she talks about Office Wear!

**Arpana says....**

"Clothes are not only my career. I find them fascinating because they tell you so much about the wearer. Today, while anything goes, there's still one place where you have to dress well if you're ambitious — the office.

**Go on Stripe!**

It's hot for most of the year, so shirts in polyester blends are ideal. I love stripes on a shirt they look so cool and fresh. This one has moody blue and gray stripes, with a single pocket and the new narrower collar and cuffs.



**Behind your back**

Remember to insist on a small pleat below the rear yoke of your shirt — it gives your shoulders room to flex.





ARPANA SHARMA

**Lounging around**

Lounge suits in dark colours, like these for business meetings, have knife pleats on the trousers and before the side pockets, making them dressy enough for evening cocktails as well.

How would I start an executive wardrobe? With Graviera.





Business clothes have to be tough to take all-day use and still look great. That means Graviera, with it's crease-free, wash 'n wear convenience and polyrich fast colour. Graviera, with it's all-weather durability was made for all the seasons of the year: summer, monsoon and winter. Graviera makes sense not only rationally, but emotionally too : when you reach for Graviera, you choose



luxury suiting well-known all over India, famous for it's high standards of excellence. It makes you look and feel your best.

You can't go wrong with Graviera."



Arpana Sharma

**People who Really know textiles, choose Graviera.**

GRAVIERA SUITING GR

சென்ற ஆண்டு வாங்கிய பட்டு சேலையைப்போல் இருக்கக்கூடாது. இந்த ஆண்டு அனைவரும் அணிவதுபோல் இருக்கவேண்டும் என்றால், நீங்கள் வரவேண்டிய இடம் குமரன் சில்க்ஸ், வேறெங்கும் கிடைக்காத புதிய டிசைன்கள், ஆயிரக்கணக்கான ரகங்கள், கண்ணைப் பறிக்கும் வண்ணக் கோலங்கள், எல்லாவற்றிற்கும் மேலாக, வியப்பூட்டும் வகையில் மிகக் குறைவான விலையில் கிடைக்கக்கூடிய ஒரே இடம்–இந்தியாவிலேயே பட்டு சேலைகளுக்கான மிகப் பெரிய ஏர்-கண்டிஷன்ட் வசதியுடன் கூடிய குமரன் சில்க்ஸ்தான். கொண்டாட்டக்களிப்பை பறை சாற்றும் கோலாகலச் சின்னம்!

REGISTERED No. M. 4592
Registered as a Newspaper in Sri Lanka



# குமரன் சில்க்ஸ்

12, நாகேஸ்வரராவ் சாலை (பனகல் பார்க் எதிரில்) தி. நகர், சென்னை-600 017.
தொலைபேசி எண்: 443544 (எமது கிளை வேறெங்கும் இல்லை)